# உ. வே. சா. பதிப்புப் பணியும் பன்முக மாட்சியும்

முனைவர் செ. இராசு



INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

# உ.வே.சா.

# பதிப்புப் பணியும் பன்முக மாட்சியும்

முனைவர் செ. இராசு



International Institute of Tamil Studies
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை - 600 113

உ.வே.சா. அறக்கட்டளைச் சொற்பொழிவு
(அறக்கட்டளை நிறுவியோர் திரு. மு.கோ. இராமன் உள்ளிட்ட
கொடையாளர் பலர்

**வரிசை எண் :** *9* **நாள் :** 13-5-03

# BIBLIOGRAPHICAL DATA



| | | |
|---|---|---|
| Title of the Book | : | U.Vē.Sā. Pathippupaniyum Panmugamātchiyum |
| Author | : | Dr. S. Raju<br>26/1, Chinnamuthu II St.,<br>Idayangkattu Valasu, Erode-638 001. |
| Publisher | : | International Institute of Tamil Studies<br>C.I.T. Campus, Chennai-600 113<br>Ph: 22542992 |
| General Editor | : | Dr. T. Mahalakshmi<br>Research Assistant, IITS |
| Publication No. | : | 447 |
| Language | : | Tamil |
| Edition | : | First Edition |
| Date of Publication | : | 2003 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | x + 110 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs.35/- (Rupees Thirty Five Only) |
| Printed by | : | United Bind Graphics<br>189-D, Royapettah High Road<br>Mylapore, Chennai - 600 004 |
| Subject | : | Tamilology |

**முனைவர் சா. கிருட்டினமூர்த்தி**
**இயக்குநர்**
**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**
**தரமணி, சென்னை-600 113.**

# அணிந்துரை

தமிழ் இலக்கிய வரலாற்றில் உ.வே.சா. என்ற பெயர் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்றுள்ளது. உ.வே.சா. இல்லாமல் சங்க இலக்கியம் இல்லை; இலக்கணம் இல்லை; சிற்றிலக்கியங்கள் இல்லை. ஓலைச் சுவடிகளில் உறங்கிக் கிடந்த தமிழ் மகளை அச்சுவாகனம் ஏற்றி அருந்தொண்டு புரிந்தவர் உ.வே.சா. இன்றைய நூல் பதிப்புப் பணி சிறந்தோங்கி இருக்கிறது என்றால் அதற்கெல்லாம் அடிப்படைக் காரணமாகத் திகழ்ந்தவர் உ.வே.சா. ஒரு நூலை எப்படிப் பதிப்பிக்க வேண்டும் என்பதற்கு டாக்டர் உ.வே.சா. அவர்களே இலக்கணமாகத் திகழ்ந்தார். உ.வே.சா பதிப்பு என்பது இன்றைய பதிப்பு நூல்களுக்கு ஒரு முன்னோடியாக அமைந்ததென்றால் அது மிகையாகாது. பதிப்பு நெறி முறைகளையும், பதிப்பு நுட்பங்களையும் எல்லோருக்கும் எடுத்துக்கூறிய ஏந்தலாக விளங்கியவர் உ.வே.சா. தமிழ் வளமுடைய மொழி என்று கூறிச் செருக்குடன் நிற்பதற்கு உ.வே.சா. பதிப்புப்பணியும் ஒரு காரணமாகும். சங்க இலக்கியப் பதிப்புகளும், காப்பியப் பதிப்புகளும், இலக்கியப் பதிப்புகளும், சிற்றிலக்கியப் பதிப்புகளுமாக உ.வே.சா பதிப்புப்பணி விரிந்து செல்லும். இவை பற்றிப் பலரும் ஆய்வுசெய்திருக்கிறார்கள். இருப்பினும் உ.வே.சா. அவர்களின் பதிப்புப் பணி பற்றியும் அவருடைய பன்முகக் கருத்துகளைப் பற்றியும் தமிழ் உலகுக்கு மீண்டும் மீண்டும் எடுத்துக்கூற வேண்டியது நம் கடமையாகும். இதனை நிறைவேற்ற இந்நிறுவனத்தில் அமைக்கப்பட்டுள்ள டாக்டர் உ.வே.சா. அறக்கட்டளையின் சார்பில் சொற்பொழிவு நிகழ்த்த முனைவர் செ. இராசு அவர்களைக் கேட்டுக்கொண்டவுடன் அவர்கள் 'உ.வே.சா. பதிப்புப்பணியும் பன்முக மாட்சியும்' என்ற பொருண்மையில் அறக்கட்டளைச் சொற்பொழிவு நிகழ்த்த இசைவு தந்தார்கள். இதனை நூலாக வெளியிடுவதில்

இந்நிறுவனம் பெருமையடைகிறது. முனைவர் செ. இராசு அவர்கள் இலக்கியம், இலக்கணம், சுவடியியல், கல்வெட்டியல் ஆகியவற்றில் வளமான புலமையும் திறனும் பெற்றவர்கள். அவர்கள் இச்சொற்பொழிவை நிகழ்த்த இசைவு தெரிவித்தமைக்கு நிறுவனத்தின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். உ.வே.சா பற்றி அறிய விரும்புகின்றவர்களுக்கு இந்நூல் ஒரு சிறந்த கையேடாக அமையும் என்பதில் ஐயமில்லை.

அறக்கட்டளைப் பொறுப்பாளர் என்ற நிலையில் இச்சொற்பொழிவு நூலாக்கம் பெறுவதற்குத் துணை நின்ற முனைவர் தி.மகாலட்சுமி அவர்களுக்கு நன்றி.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் தந்து வருகின்ற நிறுவனத் தலைவர் **மாண்புமிகு கல்வியமைச்சர் செ. செம்மலை** அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி பண்பாடு–மற்றும் அறநிலையத்துறைச் **செயலாளர் திருமிகு பு.ஏ. இராமையா, இ.ஆ.ப.,** அவர்களுக்கும், **கூடுதல் செயலாளர் திருமிகு தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.,** அவர்களுக்கும் என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இந்நூலினை ஒளியச்சுக் கோப்புச் செய்த நிறுவனக் கணிப்பொறி உதவியாளர் திருமதி பி.கௌசல்யாவிற்கும், இந்நூலினை அழகுற அச்சிட்டுத்தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தார்க்கும் நன்றி.

சென்னை
22-04-2003

இயக்குநர்

# முன்னுரை

எங்கு தமிழ் கற்பிக்கப்படுகிறதோ, எங்கு தமிழ் ஆய்வு நடைபெறுகிறதோ அங்கு டாக்டர் உ.வே. சாமிநாதையர் அவர்கள் பெயர் நினைக்கப்படும்; உச்சரிக்கப்படும்; நிலைத்து நிற்கும்.

1878 தொடங்கி 1942 வரை 64 ஆண்டுகள் ஓயாமல் தமிழ்ப் பணி செய்த பெரியார் அவர். உலகில் எந்த ஒரு மொழிக்கும் ஒரு தனி மனிதன் செய்ய முடியாத மாபெரும் பணியைத் தன்னந்தனியாக அவர் ஒருவரே செய்தார்.

ஆங்கிலம் கற்காத, தனித்தமிழ் கற்ற ஓர் ஆசிரியர் ஒவ்வொரு நூலும் ஒரு கலைக்களஞ்சியம் போல விளங்கும் வண்ணம், பிற நாட்டாரும் போற்றும் வண்ணம் இப்படி அரும்பெரும் செயலைச் செய்ய முடியுமா? என்று வியக்கும் வண்ணம் உ.வே.சா. அவர்கள் செயற்கரிய செயலை ஆற்றியுள்ளார்.

தமிழ் உள்ளவரை அவர் பெயர் வாழும். பலர் சேர்ந்து பல நூற்றாண்டுகள் செய்ய வேண்டிய பணியைப் பல பல்கலைக் கழகங்கள் செய்ய முடியாத பெரும்பணியை அவர் மெய்வருத்தம் பாராது, பசி நோக்காது, கண் துஞ்சாது செய்தார்.

உ.வே.சா. இல்லையென்றால் தமிழ்ச் செல்வங்கள் செல்லுக்கும், நீருக்கும், நெருப்புக்கும் இரையாகி அழிந்திருக்கும். தமிழ்ச் செல்வங்களாகிய இலக்கியங்களைக் காப்பாற்றித் தமிழர்க்குத் தந்த தமிழ்த் தலைமகன் உ.வே.சா. அவர்களைத் தமிழ்த் தாத்தா என, அன்புடன் அழைப்பர்.

தமிழுக்குப் பல நற்பணிகளைத் தொடர்ந்து ஆற்றிவரும் நிறுவனம் சென்னை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம். அதன் வெளியீடுகள் தமிழ்ச் சுரங்கம்.

தமிழின் பல்துறைத் தேவைகளை அறிந்து துறைதோறும், துறைதோறும் தமிழ்த்தொண்டு செய்துவரும் நிறுவனம் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.

அந்நிறுவனத்தின் சுவடியியல் அறிஞர் திரு மு.கோ. இராமன் அவர்கள் உ.வே.சா அவர்கள் பெயரில் ஓர் அறக்கட்டளையை நிறுவியுள்ளார்கள். ஆண்டுதோறும் உ.வே.சா. அவர்களைப் பற்றி அறிஞர் பலர் உரையாற்றி வருகின்றனர்.

அவை நூலாக்கம் பெற்று உ.வே.சா. அவர்களின் புகழ் பரப்பிக் கொண்டிருக்கின்றன.

அந்நிறுவன இந்நாள் இயக்குநர் முனைவர் சா.கிருட்டினமூர்த்தி அவர்கள் நிறுவன ஆக்கப் பணிகளைத் திட்டமிட்டு முறைப்படி ஆற்றி வருகிறார்கள். அவர்கள் அன்புக் கட்டளையின் வண்ணம் "**உ.வே.சா– பதிப்புப் பணியும் பன்முகமாட்சியும்**" என்ற தலைப்பில் இக்கட்டுரையை எழுதியுள்ளேன். இயக்குநர் சா. கிருட்டினமூர்த்தி அவர்கட்கும், நிறுவனத்தின் ஆட்சிக் குழுவினர்க்கும், பேராசிரியப் பெருமக்களுக்கும் என் மனமார்ந்த நன்றி உரியதாகும்.

**இடம்:** ஈரோடு

**நாள்:** 18.03.2003

அன்பன்

**செ. இராசு**

# உள்ளே

பக்கம்

# ஆசிரியரைப்பற்றி



வெள்ள முத்துக்கவுண்டன் வலசு, ஈரோடு மாவட்டத்தில் திரு. ந. சென்னியப்பகவுண்டர், நல்லம்மாள் தம்பதியினர்க்கு 02.01.1938 ஆம் ஆண்டு அருமகனாய்ப் பிறந்தவர்.

- சென்னைப் பல்கலைக்கழகத்தில் பி.லிட். பட்டமும், முதுகலைப் பட்டமும், மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத்தில் "கொங்கு நாட்டில் சமண சமயம்" என்னும் தலைப்பில் முனைவர்பட்டமும் பெற்றவர்.
- தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் கல்வெட்டு, தொல்லியல் துறையில் விரிவுரையாளராய்ப் பணியில் சேர்ந்து பேராசிரியராகவும், துறைத்தலைவராகவும் பணியாற்றியவர். இப்பொழுது அப்பல்கலைக்கழகத்தின் ஆட்சிக்குழு உறுப்பினராகவும் அமர்த்தப்பெற்றுள்ளார். தமிழ்நாடு அரசின் தொன்மைச் சின்னங்கள் பாதுகாப்புக்குழு உறுப்பினராக இருப்பது இவருக்கு மேலும் ஒரு சிறப்பாகும்.
- பேரூர் ஆதீனப் புலவர், கல்வெட்டறிஞர், கலைச்செல்வர், செந்தமிழ்க் காவலர், கல்வெட்டியற்கலைக்கோ, சீதக்காதிவிருது, இந்தியாவின் சிறந்த கல்வெட்டு ஆய்வாளர், தமிழ்நாட்டின் சிறந்த ஆய்வாளர், தொல்பொருள் ஆய்வுக்களஞ்சியம் ஆகிய பட்டங்களையும், பாராட்டுக் களையும் பெற்றவர்.
- "கொங்கு"; "தேனோலை"; "கொங்குமலர்"; ஆகிய இதழ்களை நடத்திய பத்திரிகையாளராகவும் திகழுகின்றார். பல்வேறு அமைப்புகளில் தொடர்புடையவர். அதோடு சென்னை (1968), யாழ்ப்பாணம் (1974), மதுரை (1981), கோலாலம்பூர் (1987), தஞ்சாவூர் (1995) ஆகிய ஊர்களில் நடந்த உலகத் தமிழ் மாநாடுகளில் கலந்துகொண்டு சிறப்புச் செய்தவர்.
- காயல்பட்டினம், கீழக்கரை, சென்னை, கொழும்பு ஆகிய ஊர்களில் நடந்த இசுலாமிய மாநாடுகளில் கலந்துகொண்டு

சிறப்பித்தவர்; "தஞ்சை மராட்டியர் செப்பேடுகள்" (1983), "செந்தமிழ் வேளிர் எம்.ஜி.ஆர். ஒரு வரலாற்று ஆய்வு" (1985) என்ற நூல்கள் தமிழக அரசின் பரிசு பெற்றமை இவர்க்கு மேலும் சிறப்புச் சேர்ப்பன.

- ஓலைச்சுவடிப் பதிப்புகளான கொங்கு மண்டல சதகம், மேழி விளக்கம், பூந்துறைப் புராணம், ஞானமாலை, கல்வி ஒழுக்கம், திங்களூர் நொண்டி, நீதியொழுக்கம் ஆகிய வெளியீடுகளும், தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடுகளான தஞ்சை மராட்டியர் செப்பேடுகள், தஞ்சை மராட்டியர் கல்வெட்டுக்கள், சேதுபதி செப்பேடுகள் ஆகிய வெளியீடுகளையும் தந்த பெருமைக்குரியவர்.

- நூற்றுக்கும் மேற்பட்ட இவர்தம் கட்டுரைகள் அச்சுவடிவில் வெளிவந்துள்ளன; பல்வேறு கருத்தரங்கங்களிலும் தமிழ் மேடைகளிலும் படித்த உரைகளும், கட்டுரைகளும், எண்ணிலடங்கா; பட்டி மன்றம், கவியரங்க நிகழ்வு, மாநாட்டுப் பொழிவு ஆகியவற்றில் கலந்து கொண்டு சிறப்பித்த பெருமையும் இவர்க்குண்டு.



# 1. தமிழ்ப் பெரும்பணி

"தமிழன்னையின் இளமைப் பருவத்தே அவள் புனைந்தருளிய சிறந்த பொற்பணிகள் பலவற்றைத் துருவித் தேடிக்கண்டு அவற்றை மாசுநீக்கி மீண்டும் அழகுறுத்தி அவள் தெய்வத் திருமேனியில் அணிவித்து மகிழ்ந்த தமிழ்ச் செல்வர் யார்?

தமிழ்ப் புலமையின் உரையாணியாக விளங்கும் தமிழ்ப் பெருந்தகையார் யாவர்?

தமிழ்க் கல்வி புதியதோர் மேம்பாடு உற்று எவரும் போற்றத்தக்க நிலையிலே தற்காலத்தில் நிலவுதற்குக் காரணமாயுள்ள அருந்தமிழ்ப் பேராசிரியர் யாவர்?

தமிழ் மக்கள் தங்களுடைய புராதன நாகரீகத்தையும், தொன்மை பெருமை முதலியவற்றையும் நன்கு உணர்ந்து களிப்புறும் வண்ணம் செய்வித்த தமிழ் மகனார் யாவர்?

இச் செயற்கரிய செயல்களையெல்லாம் செய்த பெரியார் மகாமகோபாத்யாய தாக்ஷிணாத்ய கலாநிதி டாக்டர் உவே.சாமிநாதையர் அவர்களேயாவர்".

இவ்வாறு மனமுவந்து பாராட்டியவர் தமிழ் அறிஞர் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்கள்[1].

"சாமிநாதய்யர் தமிழிலே பிறந்தார்; தமிழிலே வளர்ந்தார்; தமிழிலே வாழ்ந்தார்; அவர் பிறப்பும் தமிழ்; வளர்ப்பும் தமிழ்; வாழ்வும் தமிழ்; அவர் மனம், மொழி, மெய்கள் எல்லாம் தமிழே ஆயின. அவர் தமிழாயினர்; தமிழ் அவராயிற்று; அவர் தமிழ்; தமிழ் அவர்."

---

1. தமிழ்ச்சுடர் மணிகள், ப. 282.

"பழந்தமிழ் வெளியீட்டுக்குக் கால் கொண்டவர் ஆறுமுக நாவலர்; சுவர் எழுப்பியவர் தாமோதரம்பிள்ளை; கூரைவேய்ந்து நிலையம் கோலியவர் சாமிநாதையர்". என்று கூறியவர் தமிழ்த்தென்றல் திரு.வி.க.[2]

சாமிநாதையர் செய்த தமிழ்த் தொண்டுக்கு உலகில் இணை இல்லை என்றார் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை.

**கண்ணும் சடையாமல் கையும் தளராமல்**
**உண்ணப் பசிஎழுவது ஓராமல் - எண்ணி எண்ணிச்**
**செந்தமிழ்த் தாய்க்குச் செய்த திருத்தொண்டுக்கு**
**இந்நிலத் துண்டோ இணை**

என்று அவர் பாடினார்!

"பதினெட்டாம் நூற்றாண்டில் இங்கிலாந்தில் டாக்டர் ஜான்சன் இலக்கிய உலகில் என்ன உயர்நிலையில் இருந்தாரோ அதுபோல் தமிழ் இலக்கிய வட்டத்தில் உ.வே.சா. உயர்ந்து விளங்கினார்" என எஃப் மொறேஸ் என்பார் பாராட்டி மகிழ்ந்தார்.

"தமிழ் இலக்கிய சுவர்க்கத்தின் சுடரொளி காந்தும் உதய தாரகையாய்ச் சிந்தாமணிப் பதிப்பு அவரைப் புகழின் உச்சிக்கே கொண்டு வந்தது" என ஆய்வாளர் ஒருவர் பாராட்டினார்.

"இன்றைய இலக்கிய ஆய்விற்கும், பண்டைத் தமிழ் மக்களின் நாகரீகத்தையும் பண்பாட்டையும் அறிந்து மகிழ்வதற்கும் உ.வே.சா. அவர்களின் பதிப்புக்கள் பெரிதும் உதவின" என்று பாராட்டுவர் உ.வே.சா. அவர்களின் பதிப்புப் பணி பற்றி ஆய்வு செய்த பேராசிரியர் சொல்விளங்கும் பெருமாள்.

**சாமிநாதையர் ஒரு புலமைக் கடல்**
**கவிபாடும் அருங்கவிஞர்**
**மிகச்சிறந்த கட்டுரையாளர்**
**கருத்தாழம் மிக்க பேச்சாளர்**
**நுட்பமான உரையாசிரியர்**
**வாழ்க்கை வரலாற்றாசிரியர்**
**தன் வரலாறு கூறும் தகைமையாளர்**
**பழந்தமிழ் நூல்பதிப்பாசிரியர்**

2. உ.வே.சா., ஒரு தமிழ் வாழ்வு, ப.1.

எனப் பல்வேறு வகையில் அவர் புகழ் பெற்றிருந்தாலும், பதிப்பாசிரியப் பணியே அவருக்குப் பெரிதும் உவகையான பணியாக அமைந்தது. அவர் பதிப்பின் அருமையால்தான் பழந்தமிழ்ச் செல்வத்தைத் தமிழ்கூறும் நல்லுகத்திற்கு எடுத்துக் காட்டினார்.

**இருந்தமிழே உன்னால் இருந்தேன்; இமையோர்**
**விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்**

என்ற தமிழ்விடுதூதின் கண்ணி அய்யரவர்கள் மனத்தைத் மிகவும் ஈர்த்தது; இதுவே அய்யரவர்கள் கருத்து. அவர் வாழ்வின் குறிக்கோளும் அதுவே. தம்முடைய உயர் உயிர்க் குறிக்கோளை வேறொருவர் கூறினால் அவ்வுரையைப் பொன்னே போல் போற்றுவோம் அல்லவா? அதுபோல் இவ்வுரை அய்யர் அவர்கள் உள்ளத்தை மிகவும் உருக்கியது என்று ச.கு.கணபதி அய்யர் கூறுகிறார்.

மேற்கண்ட குறிக்கோள் மொழிகளோடு தம் இன்றியமையாப் பணியை இணைத்து அய்யர் அவர்கள் ஒரு வெண்பாப் பாடினார், அப்பாடல்,

**இருந்தமிழே உன்னால் இருந்தேன்; இமையோர்**
**விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்–திருந்த**
**உதிப்பித்த பன்னூல் ஒளிர அடியேன்**
**பதிப்பிக்க வேகடைக்கண் பார்**

என்பது அந்த வெண்பா.[3]

ஆம்! அய்யர் அவர்கள் திருந்தப் பதிப்பித்தார்; இதோ அவர் பதிப்புப் பணி பற்றி அவர் மாணாக்கர் வாகீச கலாநிதி கி.வா. ஜகந்நாதன் அவர்கள் கூறுகிறார்!

"ஏட்டில் இருக்கிறதை அப்படியே பெயர்த்துக் காகிதத்தில் அச்சிடும் வேலை அன்று அய்யரவர்கள் செய்தது. புத்தகப் பதிப்பு அவ்வளவு எளிதாக இருந்தால் எத்தனையோ அறிஞர்கள் அதை முன்பே செய்து புகழ் பெற்றிருப்பார்கள். ஏட்டில் உள்ள பாடம் பிழைபட்டிருக்கும்; பல இடங்களில் இன்னதென்றே ஊகிக்க முடியாத அளவிற்குச் சிதைவு உண்டாகியிருக்கும். அவற்றை எல்லாம் பல நூல் அறிவினாலும்,

3. டாக்டர் உவேசா., சதாபிஷேக மலர், பக். 128-129.

இயற்கையான அறிவுத் திறமையாலும், விடா முயற்சியினாலும், திருவருளின் துணையாலும், ஆராய்ந்து செப்பம் செய்யவேண்டும். அய்யரவர்கள் திக்குத் தெரியாத காட்டில் நுழைந்து தாமே வழியமைத்துக் காடு நாடாக்கிய பெருந்தொண்டர். அவர்களுடைய பதிப்பு என்றாலே தமிழ்ப் புலவர்களும், ஆராய்ச்சியாளர்களும் போற்றிப் பாதுகாக்கிறார்கள். ஒவ்வொரு நூலிலும் முன்னே உள்ள முகவுரையும், ஆசிரியர் வரலாறும், நூலைப் பற்றிய குறிப்புகளும், பிற செய்திகளும் மிக மிக அற்புதமானவை. நூலின் ஒவ்வொரு பக்கத்திலும் அடிக்குறிப்பில் பலவகையான விளக்கங்களும், பல நூல்களிலிருந்து எடுத்த ஒப்புமைப் பகுதிகளும் காட்சி தரும். அவை அய்யரவர்களுடைய பரந்த நூற்புலமைக்குச் சான்றாக விளங்கும். இறுதியில் நூலில் கண்ட சொற்களுக்கும், பொருள்களுக்கும் விரிவான அகராதி இருக்கும். ஆசிரியரின் உதவியின்றியே மாணாக்கர் பயிலும் வகையில் அமைந்தவை அய்யர் அவர்களின் பதிப்புக்கள்.

இந்த முறையில் கண்ணாடிபோல் மேல் நாட்டவரும் வியக்கும் வண்ணம் ஆங்கிலமே அறியாத ஒரு தமிழ்ப் பண்டிதர் புதிதாக இத்துறையில் புகுந்து சாதித்தார் என்று சொன்னால் அது அதிசயமான செயல் அல்லவா என்பது கி.வா.ஜ. அவர்கள் கருத்தாகும்.[4]

அய்யர் அவர்கள் பழுத்த சைவர்; ஆழ்ந்த சைவப் பற்று உடையவர். அவர் பழகிய புலமைசான்ற பெருமக்கள் அத்துணை பேரும் பெரும்பாலும் அவ்வாறானவர்களே. இருப்பினும் எவ்விதமான சமயக் காழ்ப்பும் இல்லாமல் சீவக சிந்தாமணி, பெருங்கதை போன்ற சமணக் காப்பியங்களையும், மணிமேகலை போன்ற பௌத்தக் காப்பியங்களையும் எடுத்துக்கொண்டு அந்தந்த மதத்தாரும் வியக்கும் வண்ணம் நடுநிலையோடு பதிப்பித்திருப்பது வியப்பிற்குரிய அற்புதச் செயலாகும்.

சமண சமயத் தத்துவத்தில் மிகத் தேர்ச்சியுடைய குணபால் செட்டியார் மனைவியாரால் 'பவ்ய ஜீவன்' என்றும்,ஆழ்ந்த புலமையுடைய கொங்கு நாட்டுப் பேரறிஞர் திரு. அ. முத்துசாமிக் கோனார் அவர்களால் 'பௌத்த சமயப் பிரபந்தப் பிரவர்த்தனாசாரியர்' என்றும் பாராட்டப்பட்டவர் நமது அய்யரவர்கள்.[5]

---

4. என் சரித்திரம், முன்னுரை, ப. 14.

5. நல்லுரைக் கோவை, நான்காம் பாகம், ப142, என் சரித்திரம், ப762.

ஏடு தேடும் பணியும், அதைப் படித்துப் பிரதி செய்யும் பணியும் மிக எளிய பணியன்று. ஏடுகள் படிப்பதிலும், பதிப்பிப்பதிலும் பட்டறிவுடைய சி.வை. தாமோதரம்பிள்ளை அவர்கள் ஏட்டுச் சுவடிகள் பற்றிப் பின்வருமாறு கூறுகிறார்.

> **ஏடு தேடும்போது ஓரம் சொரிகிறது. கட்டு அவிழ்க்கும்போது இதழ் முறிகிறது. ஒற்றை ஏட்டைப் புரட்டும்போது துண்டு துண்டாய்ப் பறக்கிறது. இனி எழுத்துக்களோவென்றால் வாலும் தலையுமின்றி நாலு புறமும் பாணக் கலப்பை மறுத்து மறுத்து உழுது கிடக்கிறது. பழைய சுவடிகள் யாவும் கிலமாய் ஒன்றொன்றாய் அழிந்து போகிறது. புது ஏடுகள் சேர்ந்து அவற்றை எழுதி வைப்பாரிலர்**

என்பது அவர் தம் உரையாகும்.

தமிழ்க்கோயில்

அய்யர் அவர்கள் சுவடிகளைச் சேமித்து வைத்த இடங்களைத் தமிழ்க் கோயில் என்றும், அங்குள்ள சுவடிகளை விக்கிரகங்கள் என்றும், அவற்றைப் போற்றிக் காத்துவரும் புலவர்களை ஆழ்வார்கள், நாயன்மார்கள் என்றும் குறிப்பிட்டுள்ளார்கள்.

மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை, சுப்பிரமணிய தேசிகர், தியாகராச செட்டியார் ஆகியோர் மறைவால் வருந்திய அய்யர் ஏடு தேடும் முயற்சியிலும், படித்துப் பரிசோதிக்கும் முயற்சியிலும் ஈடுபட்டு வருத்தத்தை மறக்க எண்ணினார். பத்துப்பாட்டு ஆய்வைத் தொடங்கிய அய்யர் அவர்கள் புது ஏடுகள் கிடைத்தால் நலம் என எண்ணித் திருநெல்வேலிப் பயணம் மேற்கொண்டு ஏடு தேடும் முயற்சியில் ஈடுபட்டார்.

திருநெல்வேலி ஈசானமடத்தில் தங்கிக் கவிராஜ நெல்லையப்பப் பிள்ளை, கவிராஜ ஈசுவரமூர்த்திப் பிள்ளை ஆகியோரிடம் சென்றார். அய்யர் அவர்கள் சுவடி தேடிய அனுபவத்தைப் பின்வருமாறு கூறுகிறார்.

"மறுநாட் காலை அவ்விரு சகோதரர்கள் வீட்டிலும் உள்ள சுவடிகளைப் பார்க்கத் தொடங்கினேன். மேலை வீதியில் உள்ள கவிராஜ ஈசுவர மூர்த்திப் பிள்ளை வீட்டில் புத்தக அறை இருந்தது. அதுதான் அவர்கள் பரம்பரை வீடு. புத்தக அறையைத்

திறந்து காட்டினார்கள். பார்த்தவுடன் என் உடம்பு சிலிர்த்தது. தமிழ்ச் சங்கத்தில் முன்பு இப்படித்தான் சுவடிகளை வைத்திருந்தார்களோ? என்று விம்மிதமடைந்தேன். ஏட்டுச் சுவடிகளை அடுக்கடுக்காகவும், ஒழுங்காகவும் வைத்திருந்தார்கள். சுவடிகளைக் கட்டி வைத்திருந்த முறையே திருத்தமாக இருந்தது. புழுதி இல்லை; பூச்சி இல்லை. ஏடுகள் ஒன்றோடு ஒன்று கலக்கவில்லை. தமிழ்த் தெய்வத்தின் கோயில் என்று சொல்லும்படி இருந்தது அவ்விடம்" என்பது அய்யர் அவர்கள் கூறும் பகுதியாகும்.[6]

மிதிலைப்பட்டி என்றவுடன் தமிழாராய்ச்சியாளர்கட்கு அழகிய சிற்றம்பலக் கவிராயர் நினைவே உண்டாகும். அப்புலவர் பெருமகனார் வீட்டுக்கு உவே.சா. ஏடு தேடிச் சென்றார். அழகிய சிற்றம்பலக் கவிராயர் வீட்டிலுள்ள ஏட்டுச் சுவடிகளைக் கண்டார். அவர் வீடு அய்யர் அவர்களுக்குத் தமிழ்மகள் ஆலயமாகத் தோன்றியது. அதைக்கண்டு அய்யர் பெருவியப்பு அடைந்தார்.

ஏடுகளைத் தொகுத்துப் பாதுகாத்த புலவர் பெருமக்கள் இல்லங்களே தமிழ்க் கோயில்கள் என்பது தமிழ்த்தாத்தா அய்யரின் கருத்தாகும். அத்தமிழ்க் கோயில் தொண்டர்களாகிய பெருமக்களே தமிழ் ஆழ்வார்கள்; தமிழ் நாயன்மார்கள்; தமிழ்ப் பிக்குகள்; தமிழ்த் தீர்த்தங்கரர்கள்; தமிழ் அடியார்கள் அவர்கள் "அடிப் பொடி எம் முடிமேலன", எனக்கொண்டு எழுப்பப் பெறும் தமிழ்க்கோயில் சுவடிகளின் இருப்பிடம்.[7]

### இயற்றமிழ் வென்றது

அய்யர் அவர்கள் குடும்பம் பக்தியில் சிறந்த கற்றறிந்த குடும்பம். வடமொழியிலும், பேரிலக்கிய இதிகாசங்களிலும், இசையிலும், தமிழிலும் அய்யர் அவர்களின் முன்னோர்கள் பாண்டித்தியம் பெற்றிருந்தனர்.[8]

அய்யர் அவர்களின் பாட்டியார் சங்கீதப் பயிற்சி உடையவர். அதனால் அய்யர் அவர்களின் தந்தையார் வேங்கட சுப்பையர் அவர்களுக்கு இளமையிலேயே சங்கீதத்தில் விருப்பம் உண்டானது.

---

6. என் சரித்திரம், ப.637.

7. உவே.சா., ஒரு தமிழ் வாழ்வு, ப.6.

8. என் சரித்திரம், ப.18.

ஐந்து வயதில் ஆசிரியர் நாராயணரிடம் தமிழ் வடமொழியோடு இசையையும் அய்யர் பயின்றார். சிறிய தந்தை ஆறாம் வயதில் இசையில் ஈடுபாடு காட்டிக் கற்பிக்கத் தொடங்கினார்.[9]

தந்தையார் அய்யர் இசை பயின்று கதாகாலட்சேபம் செய்து குடும்பத்தை நடத்த உதவி செய்ய வேண்டும் என்று விரும்பினார். இசையை அய்யர் கற்கத் தொடங்கினார். தெலுங்குக் கீர்த்தனைகளையும் கற்றுக் கொண்டார்.

இளமையிலே ஓவியம் வரைவதில் அய்யர் சிறந்து விளங்கினார். கணிதம் பயின்று, ஆங்கிலம் கற்ற அய்யர் அரசுப் பணிக்குச் செல்ல வேண்டும் என்று உறவினர் பலர் விரும்பினர்.

இசை, வடமொழி, தெலுங்கு, கணிதம், ஆங்கிலம் ஆகிய எல்லாவற்றையும் படிக்கத் தொடங்கிய அய்யர் மனம் தமிழிலேயே ஈடுபாடு கொண்டது. அதை அறிந்த தந்தையார் பல ஊர்களுக்குக் குடிபெயர்ந்தும், பல ஆசிரியர்களைச் சந்தித்தும் அய்யர் அவர்கட்குத் தமிழ்க் கல்வியை ஊட்டினார்.

குடும்பம் வறுமையில் வாடியபோதும், பல ஊர்களில், பல நிலைகளில் அடுத்தவர் ஆதரவுடன் வாழ்க்கை நடத்திய போதிலும் அய்யர் அவர்களின் கல்வி மட்டும் தொடர்ந்து எந்த இடையூறும் இன்றி நடைபெற்று வந்தது.

ஆம்! எல்லாவற்றையும் இயற்றமிழ் வென்றுவிட்டது. அதுவே தமிழ்ப்பணிக்கு மூல காரணமாக இருந்தது. அது தமிழ் செய்த தவப்பேறு ஆயிற்று.

**இதை அய்யர் அவர்களே பின்வருமாறு கூறுகிறார்கள்:**

'ஒரு நல்ல காரியத்திற்கு எத்தனைத் தடைகள் உண்டாகின்றன. நான் தமிழ் படிக்க வேண்டுமென்று தொடங்கிய முயற்சி வறுமையாலும், வேறு காரணங்களாலும் தடைப்பட்டுத் தடைப்பட்டுச் சோர்வடைந்தது. ஆனாலும் அப்படியே நின்றுவிடவில்லை. பந்துக்களில் பலர் நான் சமஸ்கிருதம் படிக்கவேண்டுமென்று விரும்பினார்கள். இராமாயண, பாரத, பாகவத காலட்சேபம் செய்து சமஸ்கிருத வித்துவானாக விளங்கவேண்டுமென்பது அவர்கள் கருத்து'

9. மேலது, ப. 51.

'வேறு சில கனவான்களோ நான் இங்கிலிஷ் படித்து விருத்திக்கு வரவேண்டுமென்று எண்ணினார்கள். உதவி செய்வதாகவும் முன்வந்தனர். நான் உத்தியோகம் பார்த்துப் பொருளீட்ட வேண்டுமென்பது அவர்கள் நினைவு. என் தந்தையாரோ சங்கீதத்தில் நான் வல்லவனாக வேண்டும் என்று விரும்பினார். அவர் விருப்பம் முற்றிலும் நிறைவேறவில்லை. எல்லோருடைய விருப்பத்திற்கும் மாறாக என் உள்ளம் இளமையிலிருந்தே தமிழ்த் தெய்வத்தின் அழகிலே பதிந்து விட்டது'.

'மேலும் மேலும் தமிழ்த்தாயின் திருவருளைப் பெறவேண்டுமென்று அவாவி நின்றது. சமஸ்கிருதம், தெலுங்கு, இங்கிலீஷ் அவற்றுள் ஒன்றேனும் என் மனதைக் கவரவில்லை. சில சமயங்களில் அவற்றில் வெறுப்பைக்கூட அடைந்தேன். சங்கீதம் பரம்பரையோடு சம்பந்தம் உடையதாகவும் என் தந்தையாரது புகழுக்கும் ஜீவனத்துக்கும் காரணமாகவும் இருந்தமையால் அதன்பால் எனக்கு அன்பு இருந்தது. ஆனால் அந்த அன்பு நிலையாக இல்லை'.

'என் உள்ளத்தின் சிகரத்தைத் தமிழே பற்றிக்கொண்டது. அதன் ஒரு மூலையில் சங்கீதம் இருந்தது. எந்தச் சமயத்திலும் அந்தச் சிறிய இடத்தையும் அதனிடமிருந்து கவர்ந்து கொள்ளத் தமிழ் காத்திருந்தது'.[10]

இறுதியில் இயற்றமிழ் வென்றுவிட்டது. அய்யர் திருஉள்ளத்தில் தமிழுக்கு மட்டும் இடம் இருந்தது. அது தமிழின், தமிழரின் நற்பேறு.

### இளமைக்கல்வி

உத்தமதானபுரத்தில் சங்கீத வித்துவான் வேங்கட சுப்பய்யருக்கும், சரசுவதியம்மாளுக்கும் 1855ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 19ஆம் தேதி அய்யர் தோன்றினார்கள்.

முதலில் உத்தமதானபுரம் நாராயணய்யரிடம் தமிழ்ப் பாடம் படித்தார். பின் சாமிநாதய்யரிடம் ஏட்டில் எழுதக் கற்றார். தில்லைக் கோவிந்த பிள்ளையிடம் பின் பயின்றார். அரியலூர் சடகோபய்யங்கார் ஆசிரியராக அய்யருக்கு அமைந்தார். அவரே அய்யருக்கு முதலில் தமிழமுதம் ஊட்டியவர்.

10. மேலது, பக்.156-157.

குன்னம் சிதம்பரம்பிள்ளையிடம் இலக்கியம் கற்கத் தொடங்கினார். அங்கு வந்த சேலம் குமாரசாமிக் கவிராயரிடம் பல இலக்கியங்களின் பெயர்களைக் கேட்டு அய்யர் மிக வியப்படைந்தார்.[11] கார்குடி சென்று கஸ்தூரி அய்யங்காரிடம் பாடம் கேட்டார். சாமி அய்யங்கார், செங்கணம் விருத்தாசல ரெட்டியார் போன்ற பலரிடமும் பாடம் கேட்டார்.

**உயர்த்திய ஏணிப்படிகள்**

மயிலாடுதுறையில் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களிடம் மாணாக்கராக அமர்ந்து 1870 ஏப்ரல் முதல் அய்யர் பாடம் கேட்கத் தொடங்கினார்.[12]

இலக்கியங்கள் பலவற்றைப் பிள்ளையவர்களிடம் அய்யர் பாடம் கேட்டு வந்தார். பாடல் இயற்றும் ஆற்றலும் பெற்றார். ஏட்டில் எழுதும் பயிற்சியும், பழைய ஏட்டுச் சுவடிகளைப் படிக்கும் பயிற்சியும் பெற்றார். அய்யர் அவர்கள் முன்னேற்றத்திற்கு முதற்படியாக இது அமைந்தது.

திருவாவடுதுறை ஆதீனகர்த்தர் சுப்பிரமணியதேசிகர் அழைப்பால் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் திருவாவடுதுறை ஆதீனம் சென்றார். அய்யர் அவர்கள் உடன் சென்று அங்குப் பாடம் கேட்கத் தொடங்கினார்.

திருவாவடுதுறை ஆதீனகர்த்தர் சுப்பிரமணிய தேசிகர் தொடர்பும் ஆதரவும் அய்யர் அவர்களுக்குப் பெரிதும் துணையாக இருந்தது. அங்குள்ள ஏடுகளைப் பார்வையிடவும், பிற ஊர்களில் ஏடு தேடவும், மிகப் பெரிய வித்துவான்கள், வள்ளல்கள் தொடர்பு ஏற்படவும் ஆதீனத் தொடர்பு மிகவும் உதவிகரமாக இருந்தது. 1.2.1876இல் பிள்ளையவர்கள் மறைவு வரை குரு-சீடர் தொடர்பு தொடர்ந்தது.

பிள்ளையவர்கள் மறைவிற்குப் பின் திருவாவடுதுறை ஆதீன ஆதரவில் இருந்த அய்யர் அவர்கள் தியாகராச செட்டியார் அன்பாலும் ஆதரவாலும் கும்பகோணம் கல்லூரியில் ஆசிரியராக 16.2.1880 முதல் அமர்ந்தார். தியாகராச செட்டியாரால் பெற்ற பெரும்பயனால் அவர் வாழ்க்கையும் தமிழ்த்தொண்டும் பெரும் மாற்றம் பெற்றன.[13]

11. மேலது, ப.83. 12. மேலது, ப.157. 13. மேலது, ப.497.

அய்யர் அவர்களின் நிறைந்த புலமை, எதையும் எளிமையாக விளக்கும் ஆற்றல், இசைப் பயிற்சி, அன்பான இயல்பு ஆகியவை மாணவர்களைப் பெரிதும் கவர்ந்தன.

கல்லூரியில் பணியில் சேர்ந்த ஆண்டிலேயே 21.10.1880இல் கும்பகோணத்தில் மாவட்ட நீதிபதியாக இருந்த சேலம் இராமசாமி முதலியார் தொடர்பால் சிந்தாமணி பதிப்பிக்கும் பேறும், சங்க இலக்கியங்கள், சிலப்பதிகாரம் மணிமேகலை அறிமுகமும் அய்யருக்கு ஆயிற்று.[14]

தமிழ் அறிஞர்கள் பலர் தொடர்பு அய்யர் அவர்கட்குக் கிடைத்தது. பதிப்புப் பணிகளும் பெருகின; சிறப்படைந்தன.

### பதிப்பு முன்னோடிகள்

மேல் நாட்டவரின் வருகை தமிழ்க்கல்வி உலகில் ஒரு மாற்றத்தை ஏற்படுத்தியது. தமிழ் நாட்டாரோடு அவர்கள் தமிழிலேயே தொடர்பு கொள்ள முயன்றனர். தமிழ்க் கல்வியும் மாற்றம் பெற்றது. அச்சகங்கள் ஏற்பட்டன. முதலில் கிறித்தவ சமய நூல்கள் அச்சிடப்பெற்றன. சமய நூல்களும் இதழ்களும் தமிழில் வெளிவரத் தொடங்கின.

வீரமாமுனிவர், கால்டுவெல், போப், சீகன் பால்கு போன்றோர் தமிழ் இலக்கியத்திற்கு வித்திட்டவர்கள். 1835 முதல் தமிழர்களும் அச்சகங்கள் வைத்துக்கொள்ள அனுமதிக்கப் பட்டனர். சென்னையில் மட்டும் ஐம்பதிற்கு மேற்பட்ட அச்சகங்கள் தோன்றின.

இக்காலத்தில் பதிப்பிக்கப்பட்ட நூல்கள் பெரும்பாலும் திருக்குறள், பாரதம், நிகண்டுகள், நாலடியார், நைடதம், பிரபுலிங்கலீலை, இராமாயணம் ஆகிய நூல்களாகவே இருந்தன. அவையும் பெரும்பாலும் ஏட்டில் உள்ளவற்றை அப்படியே பதிப்பிக்கப்பட்டனவாக இருந்தன.

ஆறுமுக நாவலர், சி.வை. தாமோதரம்பிள்ளை, தில்லையம்பூர் கவிராஜபண்டிதர், வெங்கடாசல முதலியார், இராசகோபாலபிள்ளை, விசாகப் பெருமாளய்யர், மழவை மகாலிங்க அய்யர், புதுவை நயனப்ப முதலியார், கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர், வில்லிவாக்கம் தாண்டவராய முதலியார்

14. மேலது, ப.530.

களத்தூர் வேதகிரி முதலியார், இராமானுஜகவிராயர், திருத்தணிகை ஆவணப் பெருமாளய்யர் ஆகிய பதிப்பாளர்கள் அய்யருக்கு முன்னோடிகளாகத் திகழ்ந்தனர்.[15]

### நல்வழி காட்டிய நல்லோர்

மிகச் சிறந்த ஆய்வு முன்னுரையையும், பாடினோர், பாடப்பட்டோர் வரலாறுகளையும் திணை-துறை விளக்கங்களையும், நூலுள் பயின்றுவரும் விசேடச் செய்திகளையும், உரையின் சிறப்பியல்புகளையும், மேற்கோள் இடங்களையும், ஒப்புமைப் பகுதியையும், விரிவான அரும்பத அகராதி முதலியவற்றையும், இன்றியமையாச் சொற்களுக்குப் பொருளையும் அய்யர் அவர்கள் சங்க இலக்கியங்களுக்கும், பிற இலக்கியங்களுக்கும் மிகச் சிறப்பாகத் தொகுத்து அளித்திருப்பது மாணவர்கட்கும், ஆய்வாளர்கட்கும் பெருவிருந்தாகும்.

அய்யர் அவர்கள் பதிப்பித்த நூல்களுக்கு மட்டுமல்ல; பதிப்பிக்காத நூல்களுக்கும் பொருள்- சொல்லடைவு தயாரித்தார்கள் என்பதை அவர் குறிப்பிலிருந்து அறிகிறோம்.

அதுமட்டுமன்று; தலைப்பையும், பாடலையும், உரையையும், விளக்கவுரைகளையும், அடிக்குறிப்புகளையும், மேற்கோள்களையும், வேறுவேறு பத்திகளாக வேறுவேறு அளவு எழுத்துக்களில் மேனாட்டவரும் கண்டு வியக்கும் வண்ணம் பதிப்பித்திருப்பது சிறப்புக்குரியது.

இவற்றிற்குக் காரணமாக இரண்டு நிகழ்ச்சிகள் அமைந்துள்ளன.

கும்பகோணம் கல்லூரியில் சரித்திர ஆசிரியராக இருந்தவர் கே.ஆர். துரைசாமி அய்யர். ஒருநாள் அவர் கையில் பெரிய ஆங்கிலப் புத்தகம் ஒன்றை வைத்திருந்தார். அதைப்பார்த்த அய்யருக்கும் துரைசாமி அய்யருக்கும் நடந்த விவாதத்தை அப்படியே கீழே காணலாம்.

'என்ன புத்தகம்' என்று கேட்டேன்

'பைபிள்' என்றார்

'பைபிள் சிறியதாக அல்லவா இருக்கும்? இது மிகப் பெரியதாக இருக்கிறதே' என்றேன்.

---

15. சி.வை. தாமோதரம் பிள்ளை, ஓர் ஆய்வு நோக்கு, பக்.45-46.

'இது பைபிளில் ஒரு விசேஷப் பதிப்பு. பைபிளிலுள்ள விஷயங்களைத் தொகுத்து வகைப்படுத்தி ஒரே மாதிரியான சொல்லும் கருத்தும் உள்ள பகுதிகளை அங்கங்கே காட்டிப் பதிப்பித்திருக்கிறார்கள். ஒவ்வொரு பக்கத்திலும் நடுவிலே தனியே இந்த ஒப்புமைப்பகுதி இருக்கிறது. இதை 'கன்கார்டன்ஸ்' என்று இங்கிலீசில் சொல்லுவார்கள்' என்று சொல்லி அதைப் பிரித்துக் காட்டினார்.

அந்த ஒப்புமைப் பகுதியில் பலவகை எண்கள் காணப்பட்டன. அந்தப் புத்தகத்தில் அதைத் தொகுத்தவர் படமும், அவருக்கு உதவியாக இருந்தவர் படமும் இருந்தன.

'இந்த ஒப்புமைப் பகுதியால் என்ன பிரயோசனம்' என்று கேட்டேன்.

'பைபிளில் ஒரே செய்தி பல இடங்களில் வருகிறது. ஒரே விதமான சொற்றொடர்களும் வருகின்றன. அவற்றைத் தொகுத்து வைத்து ஆராய்ந்தமையால் சில விசயங்களின் உண்மையான பொருளும், சில சொற்களின் திருத்தமான உருவமும் புலப்பட்டனவாம். பைபிளில் ஏறியிருந்த பிழையான பாடல்கள் இந்தச் சோதனையினால் திருத்தமடைந்தனவாம்' என்று அவர் எனக்கு விளக்கினார்.

அப்போது எனக்குப் புறநானூறு ஆராய்ச்சியில் புதுமுறை ஒன்று தோன்றியது. புறநானூற்றிலுள்ள விஷயங்களையும், சொற்களையும் முதலிலே அகராதியாகச் செய்துகொண்டு ஆராய்ச்சி செய்தால் உண்மை உருவத்தைக் கண்டுபிடிப்பது சுலபமாக இருக்குமென்று அறிந்தேன். அங்ஙனமே செய்து வைத்துக் கொண்டேன்.

ஒரு நூலைத் திருத்தமாகப் பதிப்பிக்க வேண்டுமென்றால் பலவகையான கருவிகளை முதலில் அமைத்துக்கொள்ள வேண்டும். . . . நூலில் உள்ள கருத்துக்களுக்கும் சொற்களுக்கும் அகராதி எழுதி வைத்துக் கொள்வது மட்டும் போதாது. . . . சங்கப் புலவர்கள் பெயர்களை வரிசையாக எழுதிக்கொண்டு அவர்கள் இயற்றிய பாடல் எந்த எந்த நூல்களில் உள்ளன என்று தெரிந்து தொகுத்துப் படித்தேன்'[16] என அய்யர் எழுதிய குறிப்பிலிருந்து கே.ஆர். துரைசாமி அய்யர் அவர்கள் அய்யரிடம் காட்டிய பைபிள் பிரதி அவருடைய பதிப்புச் செம்மைக்கு வழிகாட்டியது என்பதை அறிகிறோம்.

16. என் சரித்திரம், பக்723-725.

அய்யர் அவர்கள் முதல் பெரும் பதிப்பான சிந்தாமணிப் பதிப்பிலேயே நூலின் பகுதிகள் வெவ்வேறு வகை எழுத்துக்களிலும், வெவ்வேறு பத்திகளிலும் சிறப்பாகப் பதிப்பித்திருப்பது மிகச் சிறப்பானதாகும். அதற்கும் அச்சுக் கலையில் தேர்ந்தவர் ஒருவர் உதவி செய்தார்.

சிந்தாமணிப் பதிப்பைத் தொடங்க அய்யர் அவர்கள் சென்னை சென்று சோடசாவதானம் சுப்பராய செட்டியார் வீட்டில் தங்கினார். கையெழுத்துப் பிரதிகளையும், ஆராய்ச்சிக்கு வேண்டிய கருவிகளையும் வேறு சாமான்களையும் உடன் கொண்டு சென்றிருந்தார்.

சுப்பராய செட்டியார் பல காலம் அச்சுப் பணியில் பயிற்சி பெற்றவர். அவர் மூலம் பதிப்பைத் தொடங்க அய்யர் எண்ணினார். அய்யர் சிந்தாமணி கையெழுத்துச் சுவடிகள் இருபத்துநான்கை உடன் கொண்டு சென்றிருந்தார். அச்சிடும்போது ஏதேனும் சந்தேகம் ஏற்பட்டால் தீர்த்துக் கொள்ளலாம் அல்லவா?

மறுநாட்காலை எஸ்பி.சி.கே. அச்சுக் கூடத்தில் ஆங்கிலப் பகுதியின் மேற்பார்வையாளரும், தமிழில் நல்ல தேர்ச்சி உடையவருமான தேரழுந்தூர் சக்கரவர்த்தி இராச கோபாலாச்சாரியார் என்பவர் அய்யரைக் காண வந்திருந்தார். அவர் பலமொழிகளில் பயிற்சி உடையவர். அச்சுக் கலைகளின் எல்லா நுணுக்கங்களையும் அறிந்தவர்.

அவரை அறிமுகம் செய்து கொண்டு அய்யர் 'ஸ்வாமி, உங்களைத் தெரிந்து கொண்டது பரம சந்தோஷம். உங்களுடைய பழக்கமும் ஆசிர்வாதமும் உதவியும் எனக்கு வேண்டும். அச்சிடும் வேலையில் எனக்கு அதிகப் பழக்கமில்லை. ஆதலால் உடனிருந்து பார்த்துக் கொள்ள வேண்டும்' என்றார்.

இராசகோபாலாச்சாரியார் சீவக சிந்தாமணிப் பிரதியைப் பார்த்து அய்யர் அவர்களைப் பாராட்டினார். அய்யர் பிரதிகளை ஒப்பு நோக்கிச் சில திருத்தங்களைச் செய்ததாகக் கூறினார். பின்னர் எப்படிப் பதிப்பு அமையவேண்டும் என்பதைப் பற்றிப் பேசினார்கள்.

அய்யர் 'பாட்டு, பொழிப்புரை, விசேடஉரை எல்லாம் ஒன்றாக இருக்கின்றனவே. நான் என்ன செய்கிறது?' என்று கேட்டார்.

அப்படி மூன்றும் கலந்திருப்பதைத் தெளிவாக வேறு பிரித்து அறிவதும் அறியும்படி செய்வதும் மிகவும் கடினமான செயல்கள் என்று அய்யர் எண்ணியிருந்தார். அப்போது இராசகோபாலாச்சாரியார் சொன்ன பதில் அய்யர் அவர்கட்கு ஆச்சரியத்தை விளைவித்தது.

'அவற்றை மிகவும் சுலபமாகத் தனித்தனியே அமைத்துவிடலாம். மூலத்தைப் பெரிய எழுத்திலும், உரைகளைச் சிறிய எழுத்திலும் அச்சிடவேண்டும். பொழிப்புரையையும், விசேட உரையையும் தனித்தனியே பாரா பாராவாக அமைத்துவிட்டால் அவை வேறுவேறு என்று தெரியவரும். ஏட்டுப் பிரதியில் உள்ள குழப்பங்களையெல்லாம் அச்சில் மாற்றிவிடலாம். அதைப்பற்றி நீங்கள் சிறிதும் கவலைப்பட வேண்டாம்' என்று இராசகோபாலாச்சாரியர் சொன்னார்.[17] அதைக் கேட்ட அய்யர் அவர்கள் 'இப்படி யார் சொல்லப் போகிறார்கள். இதுவும் தெய்வத்தின் திருவருளே' என்று எண்ணிப் பேருவகையுற்றார்.

மேற்கண்ட இரு சம்பவங்கள் நூல் ஆய்வுப் பணிக்கும், பதிப்புப் பணிக்கும் பேருதவியாக இருந்த இரு சம்பவங்களாகும். இதனால் அய்யர் அவர்களின் இரு பணிகளும் திருத்தமும் தெளிவும் அடைந்தன.

17. என் சரித்திரம், ப582.

# 2. சங்க இலக்கியங்கள்

### *சங்க இலக்கியச் சிறப்பு*

தமிழ்மொழி பெற்ற பெரும் சிறப்புக்களில் தலையாயது அது சங்க இலக்கியங்களைப் பெற்றதேயாகும். உலக மானிட வாழ்வில் ஒப்பும் மிக்கதும் இல்லதாகிய அக்காலத்தில் அகவாழ்வும் புறவாழ்வும் பெற்ற பெரும் சிறப்பு சங்க இலக்கியங்கள் மூலமே வெளிப்படுகின்றன. சங்க இலக்கியங்கள் மட்டும் பாடப்படாமலிருந்தால், அல்லது 19ஆம் நூற்றாண்டின் இறுதியிலும், 20ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் அவை தமிழ் அறிஞர்களால் வெளிப்படுத்தப் படாமலிருந்தால் தமிழருடைய தொன்மை நாகரிகம், கலை, பண்பாடு, வரலாற்றுச் சிறப்பு உலகிற்குத் தெரிந்திராது. ஏன்? தமிழர்களே அறிந்திருக்க மாட்டார்கள்.

முன்னோர் சேர்த்து வைத்திருந்த அரிய புதையல், பல்வேறு அணிகலன்கள் அடங்கிய கலைப்பெட்டகம், பரம்பரைச் சொத்துக்குவியல் அவர்தம் வாரிசுக்குக் கிடைத்தால் எவ்வளவு மகிழ்வார்களோ அவ்வளவு தமிழ்ப்பற்றுள்ள தமிழன்பர்கள் மகிழ்ந்தார்கள்.

தமிழ்மொழியின் இலக்கியக் களஞ்சியமாகிய அவை நமது சிறப்பு வாழ்வியலுக்கு ஓர் எல்லைக்கல். ஒரு சிலர் வசம் ஏட்டுச் சுவடிகளாய்க் குடத்துள் விளக்காக இருந்த அவற்றைத் தேடிக்கண்டு பெயர்த்தெழுதிச் சுவடிகள் பல கண்டு சரியான பாடம் தேர்ந்து பழைய உரையுடன் ஏற்ற குறிப்புரையும் பொருளும் எழுதிக் கற்போர் எளிய முறையில் தெரிந்து கொள்ளுமாறு தமிழா இதோ உன் சொத்து எனக் காட்டிய அய்யர் அவர்களின் செயல் தமிழ் இலக்கிய வரலாற்றில் புதுமை.

சிற்றிலக்கியச் சுவையிலும், சிருங்கார ரசத்திலும், சொற்சிலம்பத்திலும் ஈடுபட்டிருந்த அக்காலகட்டத்தில் சங்க

இலக்கியப் பதிப்புக்கள் ஏற்படுத்திய மாற்றமும், மலர்ச்சியும் மகத்தானவை.

### அய்யர் அவர்கள் பணி

இப்பணியில் அய்யர் அவர்கட்கு முன்பும் பின்பும் ஒரு சிலர் ஈடுபட்டிருந்தாலும் தனிமனித சாதனையாக அய்யர் அவர்கள் சாதித்தது இமாலய சாதனை. அவர் செயற்கரிய செய்த பெரியாராகத் திகழுகிறார். பதிப்புக் கலைக்கும், இலக்கிய ஆராய்ச்சிக்கும் முன்னோடியாகத் திகழும் பெருமை அய்யர் அவர்கட்கு உண்டு.

அய்யர் அவர்கள் பதிப்பித்த சங்கஇலக்கியங்கள் காலவாரியாக,

1. பத்துப்பாட்டு (மூலமும் நச்சினார்க்கினியர் உரையும்) 1889
2. புறநானூறு (மூலமும் பழைய உரையும்), 1894
3. ஐங்குறுநூறு (மூலமும் பழைய உரையும்), 1903
4. பதிற்றுப்பத்து (மூலமும் பழைய உரையும்), 1904
5. பரிபாடல் (மூலமும் பரிமேலழகர் உரையும்), 1918
6. குறுந்தொகை (மூலமும் உரையும்), 1937

சங்கஇலக்கியங்களில் அவர் பதிப்பிக்காதது அகநானூறு, நற்றிணை, கலித்தொகை ஆகிய மூன்றுமே. அகநானூற்றைப் பதிப்பிக்கும் முயற்சியில் அய்யர் ஈடுபட்டிருந்தார்கள் என்பதை என் சரித்திரம் இறுதிப் பகுதி மூலம் தெரிந்து கொள்கிறோம். ஆனால் அய்யர் அவர்கள் அகநானூறு பதிப்பை வெளியிடாதது தமிழரின் தவக்குறைவே என்று சொல்லலாம்.[1]

### பிறர் பதிப்பு

கலித்தொகையை 1887ஆம் ஆண்டு யாழ்ப்பாணம் சி.வை. தாமோதரம்பிள்ளை அவர்களும், நற்றிணையை 1914ஆம் ஆண்டு பின்னத்தூர் அ. நாராயணசாமி அய்யர் அவர்களும், குறுந்தொகையை 1915ஆம் ஆண்டு தி.சௌ. அரங்கனார் அவர்களும், அகநானூறை 1920 ஆம் ஆண்டு கம்பர் விலாசம் இராஜகோபாலய்யங்கார் அவர்களும் பதிப்பித்தார்கள்.

1. டாக்டர் உவே.சா., சங்கஇலக்கியப் பதிப்புகள், ப.8.

### அய்யரின் சிறப்பு

பிற தமிழ் அறிஞர்கள் ஒவ்வொரு நூல் பதிப்பித்திருக்க அய்யர் அவர்கள் குறுந்தொகை நீங்கிய எட்டுத்தொகை நூல்களில் ஐந்து நூல்களின் முதல் பதிப்பையும், பத்துப்பாட்டையும் 29 ஆண்டுக்கால எல்லையில் (1889 முதல் 1918 முடிய) அச்சிட்டு வழங்கியது இமாலய சாதனை; எண்ணிக்கையில் மட்டும் அன்று; பதிப்புத் திறனிலும், செம்மையிலும், ஆராய்ச்சி முன்னுரையிலும் பல்வேறு அகராதிகளிலும் அவர் பதிப்பின் தன்மை முதன்மையிலும் முன்னிலையிலும் இருப்பதைத் தமிழ் உலகம் நன்கு அறியும்.

### பல்வேறு பதிப்புக்கள்

பத்துப்பாட்டு நூல்களும், எட்டுத் தொகை நூல்களும் தனித்தனியாகவும், முழு நூலாகவும் பின்னர்ப் பல்வேறு பதிப்புகளாகவும் எழுந்தன. நூல்கள் பல்கிப் பெருகி வந்தாலும் இவை பெரும்பாலும் அய்யர் அவர்களின் பணியையும், அடிச்சுவட்டையும் பின்பற்றின என்றால் அது மிகையாகாது.

பத்துப்பாட்டில் முல்லைப்பாட்டும், பட்டினப்பாலையும் உரையுடன் மறைமலையடிகளால் முறையே 1903, 1906 ஆம் ஆண்டுகளில் வெளியிடப்பட்டன. கலித்தொகை முதலிரு பாகங்களை 1925 ஆம் ஆண்டு சி.வை. அனந்தராமையர் வெளியிட்டார். அவரே கலித்தொகை மூன்றாம் பாகத்தை 1931இல் வெளியிட்டார். முல்லைப்பாட்டு வை.மு. கோபால கிருஷ்ணமாச்சாரியார் அவர்களால் 1929ஆம் ஆண்டும், க.ப. சந்தோஷம் அவர்களால் 1930 ஆம் ஆண்டும், இளவழகன் அவர்களால் 1939 ஆம் ஆண்டும் வெளியிடப்பட்டன.

நெடுநல்வாடை (1931), சிறுபாணாற்றுப்படை (1932), பட்டினப்பாலை (1933), பொருநராற்றுப்படை (1934) பெரும்பாணாற்றுப்படை (1936) ஆகிய நூல்களைத் தனியாக வை.மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் வெளியிட்டார்.

குறுந்தொகை 1920 ஆம் ஆண்டு கா.ரா. நமச்சிவாய முதலியார் அவர்களால் பரிசோதிக்கப்பட்டது. 1930ஆம் ஆண்டு இராமரத்தின அய்யராலும், 1933 ஆம் ஆண்டு சோ. அருணாசல தேசிகராலும் (மூலம்) அய்யருக்கு முன் பதிப்பிக்கப்பட்டது. 1938இல் கலித்தொகையைப் பாகனேரி காசிவிசுவநாதச் செட்டியார் பதிப்பித்தார்.

பதிற்றுப்பத்து (1950), புறநானூறு (இரு பகுதிகள்) (1947), நற்றிணை (இரு பகுதிகள்) (1966), ஐங்குறு நூறு (மூன்று பகுதிகள்) (1951, 1958) ஆகிய நூல்களுக்கு விளக்க உரையுடன் கூடிய பதிப்புக்களை ஔவை. சு. துரைசாமி அவர்கள் வெளியிட்டார்.

1961 ஆம் ஆண்டு வை.மு.கோ அவர்களின் உரையுடன் பத்துப்பாட்டு முழுமையாக வெளிவந்தது. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சங்கநூல்கள் அனைத்தையும் புதிய உரையுடன் வெளியிட்டது. புலியூர்க் கேசிகன் அவர்களின் தெளிவுரை பல சங்கநூல்களுக்கு அமைந்தது.

இவ்வாறு சங்கஇலக்கியம் பல்வேறு பெருமக்கள் உழைப்பால் பல்வேறு வகையான பதிப்புக்களாக வெளிவந்தன. 1940ஆம் ஆண்டு சமாஜப்பதிப்பாக வெளிவந்த பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்களின் சங்கஇலக்கியப் பதிப்பு (புலவர்கள் வாரியாக - பாட்டும் தொகையும்) ஒரு புதிய முயற்சி. இப்பதிப்புக்களால் சங்கஇலக்கியக் கல்வி பரவியது. இன்று சங்க இலக்கியங்கள் இல்லாத நூலகங்களே இல்லை என்னும் அளவிற்கு அமைந்துள்ளது. இவை எல்லாவற்றிக்கும் கால்கோள் நாட்டிய பெருமை அய்யர் அவர்களையே சாரும்.[2]

அய்யர் அவர்கள் பதிப்பிற்கு அவர் காலத்திலும், அவருக்குப் பின்னரும் பல பதிப்புக்கள் வந்துள்ளன. அய்யர் அவர்களின் பதிப்புக்கள் சிலவற்றைத் தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக்கழகம் மறுபதிப்புச் செய்தது. அகநானூற்றுக்கு ந.மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் உரை சிறப்புடையதாகும்.

### ஆய்வு முன்னுரை

நூலுக்கு நுழைவாயிலாக அமைவது முன்னுரையாகும். நல்ல சிந்தனைத் தெளிவுடன் நூல் செய்திகளை முன்னுரையில் விளக்கமாக எழுதுவது அய்யர் அவர்களின் தனிச்சிறப்பாகும். பதிப்புக்கள் தோறும் அவை செம்மை யாக்கப்படுவது வியப்பிற்குரியது. விரிவான இம் முன்னுரைகள் எழுதப்பட்டு அரை நூற்றாண்டுக்குமேல் சென்ற பின்னரும் கூட அறிவியல் சிந்தனையும் ஆய்வு நுட்பமும் வளர்ந்த இன்றுகூட அய்யர் அவர்களின் முன்னுரை புலமை உலகம் வியந்துவியந்து பாராட்டும் வண்ணம் அமைந்துள்ளது.

---

2. டாக்டர் உ.வே.சா., சங்கஇலக்கியப் பதிப்புகள், பக்.13-15.

பத்துப்பாட்டின் முதற் பதிப்பில் (1889) பத்துப்பக்க அளவுள்ள முன்னுரை மூன்றாம் பதிப்பில் (1931) இருபத்திரண்டு பக்க அளவாக விரிந்துள்ளது. முதற்பதிப்பில் பாடல்களைப் பற்றிய குறிப்பு மூன்று பக்க அளவில் அமைய மூன்றாம் பதிப்பில் பதினைந்து பக்கங்களைக் கொண்டுள்ளது. அவர்கள் பெற்ற தெளிவையும், இலக்கியரசனையைப் படிப்பவர்களுக்கு அளிக்கவேண்டும் என்ற ஆர்வத்தையும், செய்திகளை வகுத்து வழங்கும் தன்மையையும் இதனால் காணுகிறோம். பத்துப்பாட்டு முதல் பதிப்பை விட மூன்றாம் பதிப்பு சில நூறு பக்கங்கள் அதிகம் பெற்றுள்ளது.

நூல் நுவல் பொருளை முன்னுரையின் தொடக்கத்திலேயே தெளிவாக எடுத்துக்காட்டுவது அய்யர் அவர்களின் தனிச் சிறப்பாகும். மதுரைக்காஞ்சி முன்னுரையில் கூறுவோன்-கேட்போன் தொடர்பை முதற்கண் விளக்குகிறார்.

> **போர் புரிந்து பகைவரை வெல்வதையே கருதித் தன் வாழ்நாளில் பெரும் பகுதியைக் கழித்த பாண்டியன் நெடுஞ்செழியனுக்குப் பல்வேறு நிலையாமையை அறிவுறுத்தப் புகுந்த ஆசிரியர் முதற்கண்ணே தம் கருத்தைப் புலப்படுத்தாமல் அவன் முன்னோருடைய நல்லியல்புகளையும், அவனுடைய கொடை, வீரம், நற்குணம் முதலியவற்றையும் எடுத்துப் பாராட்டிப் புகுந்து, பின்பு தன் கருத்தைக் குறிப்பாகச் சில அடிகளாலே புலப்படுத்திப் பின்னர் மதுரையின் பெருவளத்தைப் பரக்கக் கூறியிருத்தல் அவரது உலகியலறிவையும், மன்னவர்களிடத்து ஒழுகும் முறையையும் புலப்படுத்துகின்றது**

என்பது அய்யர் அவர்கள் முன்னுரையில் ஒரு பகுதியாகும்.[3]

பத்துப்பாட்டில் செம்பாதி ஆற்றுப்படை நூல்கள் ஆகையால் ஆற்றுப்படையின் பொது அமைப்பை விளக்கிப் பொருநன், கூத்தன், சீறியாழ்ப்-பாணன், பேரியாழ்ப்பாணன் என ஆற்றுப்படுத்துவோனின் வேறுபட்ட தன்மைகளை மனத்துள் கொண்டு இவர்கள் யார் யார் என்பதை விளக்குகிறார். மலைபடுகடாத்தின் தனித்தன்மையை எடுத்துரைக்கும் பாங்கு குறிப்பிடத்தக்கது.

---

3. உ.வே.சா., மதுரைக் காஞ்சி முன்னுரை.

'இடைவழியில் வழிச்செல்வார்க்கு நிகழும் இடையூறுகளும், அவற்றை நீக்கிக்கொண்டு செல்லும் உபாயமும் மிக விரிவாக விளக்கப்பட்டிருக்கின்றன. சின்ன சின்ன செய்திகளைக் கூறுவேன் கேள் எனத் தொகுத்துச் சுட்டி, பின் விரிக்கும் முறை இவ்வாற்றுப்படையில் மட்டும் காணப்படுகிறது' என்பது அய்யர் அவர்கள் உரையாகும்.

## புறநானூற்றுப் புதையல்

எட்டுத்தொகை நூல்களில் அய்யர் அவர்கள் பதிப்பித்த முதல் நூல் புறநானூறு, சங்ககாலத் தமிழக வரலாற்றுக்குப் பெருந்துணைபுரியும் புறநானூற்றில் காணும் வரலாற்றுச் செய்திகளை ராவ் பகதூர் வி. வெங்கையா, வி. கனகசபைப் பிள்ளை ஆகியோர்பால் கேட்டறிந்து ஆங்காங்குக் குறித்தார்.

வி. கனகசபைப் பிள்ளையவர்கள் 'இந்த அருமையான புறநானூறு வெளிவந்தால் தமிழ்நாட்டார் பல ஆச்சரியமான செய்திகளை உணர்ந்து கொள்வார்கள். தமிழ்நாட்டுச் சரித்திர ஆராய்ச்சியைப் பலர் மேற்கொள்வார்கள். விரைவில் பதிப்பித்து நிறைவேற்ற வேண்டும்' என்று எழுதினார்கள்.

அய்யர் அவர்களும் தம் புறநானூற்று முன்னுரையில் 'இத் தமிழ்நாட்டின் பழைய சரித்திரங்களைத் தெரிந்து கொள்ளுதலிலும், தெரிவித்தலிலுமே பெரும்பாலும் காலம் கழித்து உழைத்து வரும் உபகாரிகளாகிய விவேகிகள் இந்நூலை நன்கு ஆராய்ச்சி செய்வார்களாயின் இதனால் பலர் வரலாறுகள் முதலியன தெரிந்து கொள்ளுதல் கூடும்' என்று குறிப்பிட்டுள்ளார்கள்.[4]

புறநானூற்று முன்னுரையில் அய்யர் அவர்கள் விரிவாகத் தொகுத்துக் கொடுத்துள்ள 'பாடினோர் வரலாறு' 'பாடப்பட்டோர் வரலாறு' ஆகியவை பெரும் வரலாற்று, இலக்கியச் செல்வங்களாகும். சங்ககால வரலாறு பற்றி அறிந்து கொள்வோர்க்கு அவை பெரும் புதையல்களாகத் திகழ்கின்றன.

அவர் தொகுத்துள்ள 'விசேடச் செய்திகள்' சங்ககாலச் செய்திகளைக் கூறும் கலைக்களஞ்சியமாகத் திகழ்கின்றன. உரையின் இயல்பு, அரும்பதம் முதலியவற்றின் அகராதி

4. என் சரித்திரம், ப.738.

ஆகியவற்றைப் பயில்வோர் பிறர் துணையின்றி நூல் அறிவைப் பெறப் பெரிதும் பயன்படும் பரந்த இலக்கிய அறிவால் அவர் எழுதிய குறிப்புரைப் பகுதி அவருடைய நினைவாற்றலையும், இலக்கியப் பயிற்சியையும் நமக்குக் காட்டுகிறது.

## குறுந்தொகை

பழைய உரை இல்லாத குறுந்தொகைக்கு உரை எழுதி, நூறு பக்க அளவில் அய்யர் அவர்கள் எழுதியுள்ள 'நூலாராய்ச்சி' மிகவும் தனித் தன்மை வாய்ந்தது. நூலின் பகுப்பாய்வாக இது அமைந்துள்ளது. அடிப்படைச் சிந்தனைகளைத் தெளிவாக வழங்கியுள்ளார்கள்.

> முதல், கரு, உரி என்னும் மூவகைப் பொருள் வரையறையும், கவிச்சுவையை மிகுதிப்படுத்தவே போந்ததென்று தோன்றுகிறது. உலகத்தில் குறிஞ்சி நிலத்தாரே அளவளாவுவது, பாலை நிலத்துள்ளாரே பிரிவது... என்ற வரையறையில்லை. ஆனால் கவிஞன் அமைக்கும் உலகத்திலோ இவ்வரையறைகள் காணப் படுகின்றன. இது நாடக வழக்காகும். நாடகத்தில் அரங்கில் நிகழும் நிகழ்ச்சிக்கு ஏற்ற களன் ஒன்றை நாடகப் புலவன் அமைத்துக் கொள்வதும், ஓவியப் புலவன் தான் எழுதப்புகும் ஓவியத்திற்கு ஏற்ற நிலைக்களனை எழுதிக் கொள்வதும் போன்றது இது. பிரிவைப் புனையும் ஆசிரியன் துன்ப உணர்ச்சியை மிகுதிப் படுத்தவேண்டி நீரில்லாத வறுஞ் சுரத்தையும், ஓய்ந்த யானையையும் தான் கூறும் நிகழ்ச்சியோடு இயைபுபடுத்துகிறான்

என்ற முன்னுரைப் பகுதியில் முதல், கரு, உரிப் பொருள்களின் வரையறைகளை மிகத்தெளிவாக எடுத்துக் கூறுகிறார்.[5]

## சில ஊர்ப் பெயர்கள்

நல்லூர், ஆடுதுறை, ஆவூர் போன்ற ஊர்கள் பற்றிய செய்திகளை அய்யர் மிகத் தெளிவாக ஆய்வு செய்துள்ளார்.

சிறுபாணாற்றுப்படையை இயற்றியவர் இடைக் கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார், அவர் ஊர்பற்றி,

---

5. டாக்டர் உ.வே.சா., சங்கஇலக்கியப் பதிப்புகள், ப.22.

> 'இவர் நாடாகிய இடைக்கழி நாடென்பது சென்னைக்குத் தென்மேற்கிலுள்ள ஒரு சிறுநாடு. இக்காலத்து இந்நாடு இப்பெயராலேயே வழங்கப்படுகிறது. இஃது உப்பங்கழிகளுக்கு இடையே இருத்தலின் இப்பெயர் பெற்றது போலும். இதில் உள்ள ஊர்கள் பலவற்றுள் நல்லூர் என்ற ஒரூர் இருக்கின்றது. அதுவே இந் நூலாசிரியருடைய ஊராக இருத்தல் வேண்டும்'

என எழுதியுள்ளார்.

> ஆடுதுறை மாசாத்தனார் ஊர் பற்றிக் குறிப்பிடும்போது, 'காவிரி நதியின் தென் பாலொன்றும், வடபாலொன்றும், வட வெள்ளாற்றங்கரையில் ஒன்றுமாக மூன்று ஊர்கள் ஆடுதுறை என்னும் பெயரினவாக உள்ளன. இவற்றுள் முன் உள்ள இரண்டு தேவாரம் பெற்றனவும், பின்னது புராண வரலாற்றுள்ளதுமான சிவஸ்தலங்கள்; இவை முறையே தென்குரங்காடுதுறை, வடகுரங்காடுதுறை, ஆடுதுறை என வழங்கும். பின்னுள்ளது ஏழு துறைகளில் ஒன்று'

என எல்லா ஆடுதுறைகளையும் கூறுகிறார்.

ஆவூர் கிழாரின் ஊரைக் குறிப்பிடும்போது அவர் பாடல் மூலம் ஊர் பற்றிய அகச் சான்றை எடுத்துக்காட்டுகிறார்.

> 'ஆவூர் என்னும் பெயருள்ள ஊர்கள் தமிழ்நாட்டில் பல இருத்தலின் இந்த ஆவூர் இன்ன இடத்தில் உள்ளதென்று தெரிந்துகொள்ளக் கூடவில்லை; ஆனாலும் மருத நிலத்தின் வளம் இவர்பாடலிற் கூறப் பெற்றிருத்தலின், இது சோழநாட்டில் காவிரியின் தென்கரையிலுள்ள ஆவூராக இருக்கலாமென்று ஊகிக்க முடிகின்றது.

என்று ஆவூர் கிழாரின் ஆவூரை அடையாளம் காட்டுகிறார்.

## அரும்பத முதலியவற்றின் அகராதி

அய்யர் அவர்கள் பதிப்பில் மிகவும் சிறப்பிடம் பெறக் கூடியது நூலின் இறுதியில் விரிவாகக் கொடுக்கப்பட்டுள்ள அரும்பத முதலியவற்றின் அகராதியாகும்.

முதல் பதிப்பில் கொடுக்கப்பட்டுள்ள அகராதியைக் காட்டிலும் பதிப்புக்கள் தோறும் அவை பெருகி வருவதும் இன்றியமையா மாற்றங்கள் பெறுவதும் சிறப்புக்குரியதாகும்.

அருஞ்சொற்களுக்குப் பொருள் கூறுவதும், பல பொருள்தரும் சொற்களுக்குப் பலபொருள்களையும் கூறுவதும், அருஞ்சொற்களோடு அரிய தொடர்களைக் கூறுவதும், இன்றியமையாச் செய்திகளையும், கருத்துக்களையும கூறுவதும், உவமைகளையும், பண்டைய பழக்க வழக்கங்களையும், இலக்கணப் பகுதிகளைக் கூறுவதும் அரும்பத முதலியவற்றின் அகராதியின் சிறப்பாகும்.

அய்யர் அவர்களின் அரும்பத் முதலியவற்றின் அகராதி மூலம் ஒரு பாடலின் சிறு சொல்லோ, தொடரோ தெரிந்தால்கூடப் பாடலை மிக எளிதில் கண்டுபிடித்துவிடலாம். ஆய்வாளர்கட்கும், இலக்கியம் பயிலும் மாணவர்கட்கும் அவ்வகையில் அரும்பத முதலியவற்றின் அகராதி மிகவும் பயன்படும்.

அய்யர் அவர்கள் சங்க இலக்கியப்பதிப்பில்,

| | |
|---|---|
| பத்துப்பாட்டு | 175 பக்கம் |
| புறநானூறு | 73 பக்கம் |
| ஐங்குறுநூறு | 30 பக்கம் |
| பதிற்றுப்பத்து | 40 பக்கம் |
| பரிபாடல் | 54 பக்கம் |
| குறுந்தொகை | 90 பக்கம் |

அரும்பத முதலியவற்றின் அகராதிகள் உள்ளன.

இவற்றையெல்லாம் ஒன்றாக்கி அகரவரிசைப்படுத்தி அச்சிட்டால் சங்க இலக்கியங்களுக்குப் பயனுடைய சிறந்த அகராதி கிடைக்கும் என்று கூறுவர்.[6]

பிற நூல்களுக்கும் அரும்பொருள் முதலியவற்றின் அகராதித் தொகுப்பாளருக்கும் அய்யர் அவர்கள் அகராதி மிகச்சிறந்த வழிகாட்டியாக அமையும். மிக விரிவாக அரும்பத முதலியவற்றின் அகராதி தொகுக்கப்பட்டுள்ள பத்துப்பாட்டின்

6. டாக்டர் உவே.சா., சங்கஇலக்கியப்பதிப்புகள், ப93.

மூலம் (மூன்றாம் பதிப்பு) இம்முறையில் அமைந்த அகராதியின் பல்வேறு சிறப்புக்களைக் காணலாம்.

**பொருள் கூறுதல்**

1. அகடு - நடு (608)
2. அசைத்து - முறித்த (593, 648)
3. அமை - மூங்கில் (63, 85, 611, 656)
4. அசைதல் - தங்குதல் (612)
5. அழிபசி - அறிவு முதலியன அழிதற்குக் காரணமான பசி (140)
6. அலரி - ஞாயிறு, பூ (263, 477, 498, 503, 578, 626)
7. அணி - அணிகலன், படை, அழகு (170, 180, 370, 387, 416, 422, 614)
8. அகளம் - தாழி, நீர்ச்சால், யாழ்ப்பத்தர் (146, 172, 617)
9. அரி - அரிசி, அரித்தெழும் ஓசை, அழகு, ஐம்மை, சிலம்புள்மணி, சூரியன், தவளை, பொன், மாமிசம், மென்மை, வண்டு (44, 57, 71, 104, 171, 208, 258, 259, 306, 365, 387, 409, 417, 577, 592, 624, 646, 651)
10. துணை - இரண்டு, இமை, உதவி, ஒப்பு, கணவன், பேடு, மனைவி (69, 135, 253, 259, 401, 402, 452, 458, 459, 485, 501, 542, 607)

**உவமைகாட்டல்**

1. அங்காடித் தெருவிற்குச் சித்திரம் (377)
2. அரவுரியன்ன அறுவை (89)
3. அருவி கொடிபோலத் தோன்றுதல் (603)
4. அவரைக் காய்க்கு அரிவாள் (572, 616)
5. அலவன் தாளுக்கு முடிந்த கொடிறு (193)
6. அனந்தன் அன்ன கையுடைய யானை (269)
7. ஆடவர் மார்பிற்குக் கல் (193)

8. உடையின் மென்மைக்குப் புகை (16, 54)
9. வேப்பிலைக்கு அரத்தின்வாய் (117)
10. வைக்கோல் போருக்குப் பூதம் (194)

பழக்கவழக்கம் காட்டல்

1. அகில் முதலியவற்றைப் புகைத்தல் (450)
2. படுக்கையின் மேல் மடித்த துகிலை விரித்தல் (459)
3. இரண்டு தலையும் கட்டித் தைத்த போர்வை (102)
4. உடைக்கு மேல் அணிகலன்கள் அணிதல் (422)
5. உப்புப் போக நீரில் குளித்தல் (540)
6. யானை வருதலைப் பறை அறைந்து தெரிவித்தல் (97)
7. விழாக்களுக்குக் கொடிகட்டுதல் (377)
8. இரண்டு அறுவையை உள் ஒன்றும் புறம் ஒன்றும் அணிதல் (68)
9. நெய் வார்த்து விளக்கைத் தூண்டுதல் (455)
10. அரும்பை விரலால் அலைத்து மலர்வித்தல் (63)

நம்பிக்கைகள்

1. அகத்தியர் இசைபாடி இராவணனை வென்றது (342)
2. தீவினை போகக் கடலாடல் (540)
3. மேரு மலையில் தேவர் உறைதல் (205, 253)
4. அருச்சுனன் காண்டவ வனத்தை எரித்தமை (174)
5. அசுரர் வேள்வியைக் கெடுத்தல் (50)
6. அயன் படைத்தல் தொழிலைத் தவிர்த்தது (57)
7. இரண்டு யானைகள் இடையில் திருமகள் வீற்றிருத்தல் (453)
8. இருடிகளைக் கடவுள் என்று கூறுதல் (343)

9. ஆகாயத்திற்கு வடிவு இல்லை (417)
10. செம்பாம்பு மதியைக் கவர்வது (248)

**இலக்கணம் கூறுதல்**

1. அகர ஈற்றுப் பெயரெச்ச உவம உருபு (621)
2. அது என்னும் முதனிலைத் தனிவினை அற்று எனப் பொருள்பட்டு வினையெச்சமாதல் (8)
3. அன்ன-பெயரெச்சமாகிய உவம உருபு (64, 184, 190)
4. ஆங்கு என்பது வினை உவமத்தின் கண்ணும், உருவுவமத்தின் கண்ணும் வருதல் (2)
5. ஆசிரியத்துப் பிறதளை வருதல் (2)
6. இகர ஈற்று உரிச்சொல்முன் வல்லினம் இயல்பாக வருதல் (298)
7. இரண்டாம் வேற்றுமை உருபு அன்ன என்பதையும் கொண்டு வருதல்.
8. இலக்கணத்தோடு பொருந்திய மரூஉ (38)
9. உரிச்சொல் எழுத்தில் திரிந்து இசைத்தல் (203)
10. வின்னமுற்று வினையெச்சமாதல் (203, 505)

புறநானூற்றில் அரும்பத முதலியவற்றின் அகராதியில் புறத்துறைகள் பலவற்றிற்கு விளக்கம் கூறியுள்ளார்.

1. **அரசவாகை** - அரசனது வெற்றியைக் கூறுதல் (43)
2. **ஆனந்தப்பை யுள்** - ஒருவன் இறந்ததைப் பற்றிச் சுற்றத்தார் இரங்கிக் கூறுதல் (228)
3. **உண்டாட்டு** - வீரர் மதுவை உண்டு மனம் களித்தல் (257)
4. **உவகைக் கலுழ்ச்சி** - வாட்புண் மிகுந்த உடம்பையுடைய கணவனைக் கண்டு மனைவி மகிழ்ந்து கண்ணீர் வீழ்த்தல் (277)
5. **எருமை மறம்** - முதுகிட்ட தன் சேனைக்குப் பின் பகைவர் சேனையை அஞ்சாது மிகுந்த கோபம் கொண்டு நிற்றல் (80)

6. **ஏர்க்கள உருவகம்** - போர்க்களத்தை ஏர்க்களமாக உருவகம் செய்தல் (369)

7. **களிற்றுடனிலை** - ஒரு வீரன் தன்னால் கொல்லப்பட்ட யானையுடன் தானும் வீழ்ந்து இறந்ததைக் கூறுவது (307)

8. **குடைமங்கலம்** - அரசன் குடையைப் புகழ்ந்து சொல்லுதல் (60)

9. **கையறுநிலை** - கழிந்துபோன பொருளைக் குறித்து இரங்கிக் கூறுதல் (65)

10. **செவியறிவுறூஉ** - அரசன் செய்யவேண்டும் உலகங்காவல் முறையை அவனிடம் சொல்லி அவன் செவியில் புகுத்தி அறிவித்தல் (55)

புறநானூறு கூறும் சில துறைகட்குப் புறப்பொருள் வெண்பாமாலை சிறிது வேறுபட்ட விளக்கம் கூறுவதையும் ஆங்காங்கு எடுத்துக் காட்டுவார் அய்யர் அவர்கள்.

### வரலாற்றுக் குறிப்புத்தருதல்

அய்யர் அவர்கள் புறநானூறு பதிப்பிக்கும் காலத்தில் வரலாற்றிலும், கல்வெட்டு ஆராய்ச்சியிலும் சிறந்து விளங்கிய வி. வெங்கையா, டி.ஏ. கோபிநாதராயர், வி. கனகசபைப் பிள்ளை, மு. ராகவையங்கார் ஆகியோர்பால் பல வரலாற்றுச் செய்திகளைக் கேட்டும், தாம் அறிந்த வரலாற்றுச் செய்திகளையும் ஆங்காங்குப் புறநானூறு அரும்பத முதலியவற்றின் அகராதியில் அய்யர் அவர்கள் எடுத்துக் காட்டுவார்.

1. **அம்பர்** - (அம்பல்) பாடல் பெற்ற சிவஸ்தலங்களில் இப்பெயருடையது ஒன்றுண்டு. தஞ்சாவூர்க் கல்வெட்டுக்களில் அம்பர் என்ற ஊர் அடிக்கடி சொல்லப்படுகிறது (385).

2. **அரிசில்** - இது சோழநாட்டுள்ள நதி ஒன்றன் பெயர். இந்நதிக்கும் காவிரிக்கும் நடுவிலிருந்த நாட்டுக்கு உய்யக்கொண்டான் வளநாடென்று பெயர் வழங்கிவந்தது (146).

3. **ஆலங்குடி**-ஒரு சிவஸ்தலம். இப்பெயரையுடைய ஊரொன்று சோழ - நாட்டிலிருக்கிறது. பழைய கல்

வெட்டுக்களில் இவ்வூர் இரும்பூளை என்று சொல்லப்பட்டிருக்கிறது *(319).*

4. *ஆவூர்* - பாடல் பெற்ற சிவஸ்தலங்களில் இப் பெயரையுடையது ஒன்றுண்டு. நித்தவிநோத வளநாட்டின் உட்பிரிவான ஆவூர்க்கூற்றம் தஞ்சாவூர்க் கல்வெட்டுக்களில் அடிக்கடி கூறப்பட்டுள்ளது. விளத்தூர், இரும்புதல் என்ற ஊர்கள் இக்கூற்றத்தைச் சேர்ந்தவை.

5. *எறிச்சலூர்* - இது கோனாட்டுள்ள ஊர்களில் ஒன்று. அறந்தாங்கிக்கும், குளகாப்பட்டிக்கும் மத்தியிலுள்ளது *(54).*

6. *நன்னன்* - ஒரு சிற்றரசன். இவன் ஆண்ட பல்குன்றக் கோட்டம் என்ற நாடு வட ஆர்க்காடு, தென்ஆர்க்காடு ஜில்லாக்களில் அடங்கி யிருக்கின்றது *(151).*

7. *மாறோக்கம்* - கொற்கையைச் சூழ்ந்த நாடென்பர். மாறோகம் எனவும் வழங்கும் *(37).*

8. *மிழலைக்கூற்றம்* - இது வேள் எவ்வியினுடையது.

கூற்றம் - நாட்டின் உட்பிரிவிற்கு ஒரு பெயர். இக்கூற்றம் தஞ்சாவூர்ப் பெரியகோயில் கல்வெட்டு ஒன்றிலும், திருப்பூவனத்துத் தாம்பிரப்பட்டயத்திலும் சொல்லப் பட்டிருக்கிறது. துஞ்சலூர், தண்டலை என்ற ஊர்கள் இக்கூற்றத்தைச் சேர்ந்தவை *(24).*

9. *அதியமான்* - அதிகமான், அதிகன், அதிகைமான், அதியன் இவ்வனைத்தும் சேர வம்சத்தைச் சேர்ந்த ஓரரசனைக் குறிக்கும். சித்தூரைச் சேர்ந்த போளூருக்கடுத்த திருமலை என்ற சமணக் கிராமத்தில் உள்ள கல்வெட்டால் அதிகன் என்று கூறப்பட்டுள்ள கேரள தேசத்து அரசனொருவன் இருந்தான் என்பதும், அவனுக்கு இராசராசன் என்ற மற்றொரு பெயருண்டென்பதும் அவன் வம்சத்தில் எழினி அல்லது யவநிகா என்ற ஓரரசன் இருந்தான் என்பதும் இராசராசனுடைய மோரனான விடுகாதழிகிய பெருமாள் தகடா

என்று சொல்லப்பட்ட ஊரை ஆண்டான் என்பதும் தெரிகின்றன. தகடா என்று சொல்லப்பட்ட இந்த ஊரே தமிழில் தகடூர் என்று வழங்கி வந்ததாகத் தோன்றுகிறது (101).

10. கானப்பேர்-காளையார்கோயில். இது பல சிற்றரண்களையுடையதொரு பேரரணை உடையது. பாண்டிய நாட்டில் பாடல் பெற்ற சிவஸ்தலங்களில் கானப்பேர் என்ற ஊரொன்று உண்டு. தஞ்சாவூர்க் கல்வெட்டு ஒன்றில் பாண்டிநாட்டைச் சேர்ந்த திருக்கானப்பேர்க் கூற்றம் கூறப்பட்டுள்ளது. பாளூர் என்ற ஊர் இக்கூற்றத்தைச் சேர்ந்தது. இது ஈழத்தரசன் பராக்கிரமமாகு என்பவனுடைய சேனாதிபதியின் கைவசத்திற் சிலகாலம் இருந்ததாக மகாவம்சத்திலிருந்து தெரிய வருகிறது (21).

அண்மைக் காலத்தில் கிடைத்த வரலாற்றுச் சான்றுகள் அய்யர் அவர்கள் தக்கார்வழி அறிந்து ஆங்காங்கு ஏற்ற இடத்தில் கூறியிருப்பது பிற்கால ஆய்விற்குப் பெரிதும் துணைபுரியும் வகையில் அமைந்துள்ளது.

# 3. காப்பியங்கள்

## காப்பியப் பதிப்புகள்

அய்யர் அவர்கள் 1878இல் 'வேணுவனலிங்க விலாசச் சிறப்பு' 1883 இல் திருக்குடந்தைப் புராணம், 1885 இல் மத்தியார்ச்சுன மான்மியம் ஆகியவற்றைப் பதிப்பித்திருந்தாலும் அவரை மிகச் சிறந்த பதிப்பாசிரியர் நிலைக்கு உயர்த்தியது சீவகசிந்தாமணிப் பதிப்பேயாகும். பின்னர் வந்த பதிப்புக்களுக்கும் அடிப்படைப் பயிற்சிப் பதிப்பாகவும் வழிகாட்டியாகவும் அமைந்தது சீவகசிந்தாமணிப் பதிப்பேயாகும்.

சீவகசிந்தாமணி (1887)

சிலப்பதிகாரம் (1892)

மணிமேகலை (1897)

பெருங்கதை (1924)

உதயண குமார காவியம் (1935)

ஆகியன அய்யர் பதிப்பித்த காப்பியப் பதிப்புக்கள் ஆகும்.

## சீவகசிந்தாமணி

சேலம் இராமசாமி முதலியார் அவர்களின் தூண்டுதலின் பேரில் சிந்தாமணி அறிமுகத்தை அய்யர் பெற்றார்.[1] முதலில் இரண்டு ஏடுகளே இருந்தன. பின் பவர்துரை அச்சிட்ட நாமகள் இலம்பகத்தைப் பெற்றார். சுப்பிரமணிய தேசிகர் மூலமாகத் திருநெல்வேலிப் பிரதி ஒன்றையும், திருவாவடுதுறை ஆதீனத்தில் இருந்த பிரதியையும் பெற்றார். இவ்வளவு பிரதிகள் பெற்றும் ஐயத்திற்கு இடமான பல பகுதிகள் இருந்தமையால் பல இடங்களில் ஏடுகள் தேடினார்.

---

1. என் சரித்திரம், ப.530.

முதலில் தஞ்சை விருஷபதாசமுதலியார் வீட்டிற்குப் பயணமாகச் சென்றார். சைவ மடத்திலிருந்து வந்த சைவருக்குச் சமண ஏட்டைக் கொடுக்க மறுத்த அவரிடம் பெரிதும் முயன்று ஏடு பெற்றார். பின் பல இடங்களில் தேடி 23 பிரதிகள் பெற்றும் நூல் அச்சாகிக் கொண்டிருக்கும் போது கூட ஏடு தேடினார்.

20 ஏடுகளைப் பார்த்துப் பவர்துரை எழுதிய பிரதியைக் கிறித்துவக் கல்லூரிப் பேராசிரியர் சின்னசாமி பிள்ளையிடம் பெற்றார்[2] எதிர்பார்த்த அளவு அது பயனுடைய பிரதியாக இல்லை. கொட்டையூர்க் கவிராச பண்டிதர், கிருஷ்ணாபுரம்-கடைய நல்லூர்க் கவிராயர்கள் சேற்றூர்ச் சுப்பிரமணியக் கவிராயர் ஆகியோரிடம் ஏடுகள், கையெழுத்துப் பிரதிகள் பெற்றார். நூல் அச்சாகும்போது கூட ஏடு தேடும் பணியை மேற்கொண்ட அய்யர் அவர்கள் ஆர்வம் மிகவும் பாராட்டத்தக்கது.[3]

சமணச் சான்றோர் பலரிடம் சிந்தாமணியில் ஏற்பட்ட ஐயங்களைப் போக்கிக்கொண்ட அய்யர் அவர்கள் நச்சினார்க்கினியர் உரையுடன் மிகச் சிறப்பாகச் சிந்தாமணியைப் பதிப்பித்தார்கள்.

**சிலப்பதிகாரம்**

சிலப்பதிகாரம் அப்போது கல்லூரிகளில் பாட நூலாக வைக்கப்பட்டிருந்தது. அய்யர் அவர்கள் சிலப்பதிகாரத்தை 1892 இல் பதிப்பிக்கும் முன்னரே 1876 ஆம் ஆண்டு சீனிவாச ராகவாச்சாரியாரும், 1880இல் சோடசாவதானம் சுப்பராயச் செட்டியாரும் புகார்க் காண்டத்தை மட்டும் பதிப்பித்திருந்தனர்.[4]

சேலம் இராமசாமி முதலியாரின் காகிதப் பிரதி, மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களின் மூலப்பிரதி, உரைப் பிரதி, தியாகராச செட்டியார் பிரதி ஆகியவை அய்யரிடம் இருந்தன. இவற்றால் நிறைவு பெறாது பல இடங்களில் ஏடு தேடினார்.

அடியார்க்கு நல்லார் உரைக்குறிப்பிலிருந்து அவர் சிலப்பதிகாரம் முழுமைக்கும் உரை எழுதியிருக்க வேண்டும்

---

2. என் சரித்திரம், ப587.

3. உவே.சா., காப்பியப் பதிப்புகள், ப.4.

4. மேலது, ப13

என்று தேடினார். தேரழுந்தூர் ராஜகோபாலாச்சாரியார் கொடுத்த அரும்பத உரைப்பகுதியும் ஏடுகள் தேடக் காரணமாய் அமைந்தது. தமிழ்நாட்டில் பல இடங்களில் மட்டும் அல்ல; லண்டன் பொ. குமரசாமி முதலியார், பாரிஸ் பேராசிரியர் சூலியன் வின்சன் மூலமாகவும் சுவடிகள் தேடினார்.[5]

கரிவலம் வந்த நல்லூரில் சிலப்பதிகார ஏடு தீக்கிரையானது கண்டு மிகவும் வருந்தினார். 1890 இல் நெல்லை சாலிவாடீசுர ஓதுவார் வீட்டில் மூலப்பிரதியும், உரைப் பிரதியும் பெற்றார். ஆறுமுகமங்கலம் குமரசாமிப் பிள்ளை, நெல்லை வக்கீல் சுப்பையாபிள்ளை வீட்டில் சிலப்பதிகாரப் பிரதி ஆடிப்பெருக்கு வெள்ளத்தில் விடப்பட்டதை அறிந்து வருந்தினார்.

குன்றக்குடி மடத்தில் சிலப்பதிகார மூலப் பிரதியைப் பெற்றார். அடியார்க்கு நல்லார் உரை குறையானது கிடைக்குமா என்று ஐம்பது இடங்களுக்குச் சென்று தேடிக் கிடைக்காது வருந்தினர். 14 உரைப் பிரதியும் 8 மூலப் பிரதிகளும் பெற்று ஆய்வு செய்தார்.

அடியார்க்கு நல்லார் உரையை ஆராய்ந்து இசை நூல்களை ஆராய்ந்தார். சிலப்பதிகாரத்தில் வரும் இசை பற்றிய செய்திகளை மகா வைத்தியநாத அய்யரிடமும், அவர் தம்பி வையை இராமசாமி அய்யரிடமும், நாட்டியக் கலை பற்றிய செய்திகளைக் கும்பகோணம் நடேச தீட்சிதரிடமும், ராயர் ஒருவரிடமும் கேட்டறிந்தார். யோகம் சம்பந்தமான செய்திகளை கும்பகோணம் தாசில்தார் அய்யாச்சாமி சாஸ்திரிகளிடமும் கேட்டுத் தெரிந்து கொண்டார். இவ்வளவு அரிதின் முயன்றும் விளங்காத செய்திகளை விளங்கவில்லை என்றே அய்யர் குறித்துள்ளார்கள். மிதிலைப் பட்டிப் பிரதி பல இடங்களில் அய்யருக்கு ஏற்பட்ட ஐயங்களைப் போக்கியது.[6]

பல பிரதிகளைப் பார்த்துச் சரியான பாடத்தைக் குறித்துக் கொண்டார். சிந்தாமணி, பத்துப்பாட்டுப் பதிப்பை விடப் பல செய்திகளைத் தம்பட்டறிவால் சிலப்பதிகாரப் பதிப்பில் அய்யர் தந்தார்.

---

5. மேலது, ப.14.
6. மேலது, பக்.14-15.

அரும்பதம், அடியார்க்கு நல்லார் உரையில் காணப்படும் நூல்கள், அரசர், நாடு, ஊர், மலை, ஆறு, பொய்கை, தெய்வம், புலவர் முதலிய பெயர் அகராதிகளைத் தொகுத்தார். கதைச் சுருக்கம், இளங்கோவடிகள் வரலாறு, அடியார்க்கு நல்லார் வரலாறு, மேற்கோள் நூல் பற்றிய வரலாறு ஆகியவற்றைத் தொகுத்த பின்னரே சிலப்பதிகாரத்தை அச்சுக்குக் கொடுத்தார்.

**மணிமேகலை**

மணிமேகலை 1897 இல் அய்யர் பதிப்பிக்கும் முன்னரே திருமயிலை வித்துவான் சண்முகம்பிள்ளை அவர்கள் 1891 இல் வெளியிட்டுள்ளார்கள்.[7] கிடைத்த பிரதிகள் அத்துணையிலும் மூலம் மட்டுமே இருந்தன. சென்னை, தஞ்சைச் சுவடி நூலகங்களிலும், யாழ்ப்பாணம், பாரிஸ் போன்ற இடங்களிலும் தாமும் தக்காரைக் கொண்டும் தேடினார். எங்கும் கிடைக்காததால் கிடைத்த பத்து ஏடுகளைக் கொண்டு பதிப்பித்தார்.

மாசூர் ரங்காச்சாரியர் மூலம் மணிமேகலை பௌத்த நூலெனத் தெரிந்து பௌத்த சமயம் பற்றிய பல செய்திகளை அவர் மூலம் தெரிந்துகொண்டார். தமிழில் உள்ள நூல்களில் வரும் பௌத்தக் கருத்துக்களைத் தொகுத்துக் கொண்டதுடன், மானியர் வில்லியம்ஸ், மாக்ஸ்முல்லர், ஓல்டன் பர்க், ரைஸ் டேவிஸ் போன்றோரின் ஆங்கில நூல் கருத்துக்களையும் ரங்காச்சாரியார் உதவியுடனும், தக்கார் உதவியுடனும் குறிப்பெடுத்துக் கொண்டார்.[8]

மணிமேகலையோடு தொடர்புடைய, இலங்கையில் உள்ள இடங்களைப் பற்றிய குறிப்புக்களை 'சுமங்களா', என்னும் பௌத்தப் பெரியார் வாயிலாகப் பெற்றார். மணிமேகலைக்குப் பழைய உரை இல்லாமையால் அய்யர் உரை எழுதினார். மணிமேகலையில் உளள சமயக் கணக்கர் தந்திரம் கேட்ட காதை, தவத்திறம் பூண்டு தருமம் கேட்ட காதை ஆகியவற்றிற்கு வடமொழி-தர்க்க சாஸ்திரம் வல்லாரான குறிச்சி மகாமகோபாத்யாய ரங்காச்சாரியாரிடம் கேட்டுத் தெரிந்துகொண்டார். தெரியாதவற்றைத் தெரியவில்லை என்றே எழுதினார்.

---

7. உவே.சா., காப்பியப் பதிப்புகள், ப.17.

8. மேலது, ப.18.

**பெருங்கதை**

பத்துப் பாட்டிற்கு ஏடு தேடி அலைந்தபோது நெல்லை கவிராச பண்டித நெல்லையப்பப்பிள்ளை வீட்டில் முதலில் 'கொங்குவேள் மாக்கதை' என எழுதப்பட்ட பழஞ்சுவடியைப் பார்த்தார். அந்நூல் பெயரை இலக்கணக் கொத்து உரையால் அறிந்திருந்தார். இன்ன நூல் என்று அப்போது விளங்க வில்லை.[9]

கொங்குவேள் என்பவரைப் பற்றிய கதை என முதலில் எண்ணினார். பின்னர்த் திருப்பாற்கடனாத கவிராயர் வீட்டில் கிடைத்த ஏட்டுச் சுவடியையும் பெற்றுக் கொண்டார்.

சிலப்பதிகாரம் அடியார்க்கு நல்லார் உரையால் தான் அது உதயணனைப் பற்றிய கதை என்றும், பெருங்கதை, என அதற்குப் பெயர் உண்டென்றும் அய்யர் அறிந்து கொண்டார். காகிதத்தில் படி எடுத்துப் பல குறிப்புக்களுடன் எழுதிய காகிதப் பிரதி வி.கனகசபைப் பிள்ளை அவர்களிடம் அய்யர் கொடுத்தார். பின் அது அய்யர் அவர்கட்குக் கிடைக்கவில்லை.

வடநூல் கருத்துக்கள் சிலவற்றையும், வடநூல் பற்றிய கருத்துக்களையும் எஸ். இராமச்சந்திர சாஸ்திரி, சின்னத்தம்பி சாஸ்திரி ஆகியவர்களிடமும் கேட்டுத் தெரிந்து கொண்டார்.[10]

**பதிப்புக்கள் செம்மையுறல்**

1887இல் சீவகசிந்தாமணியைப் பதிப்பித்த அய்யர் 1907, 1922, 1942 ஆம் ஆண்டுகளில் மறுபதிப்புக்களை வெளியிட்டார்.

1892இல் சிலப்பதிகாரத்தைப் பதிப்பித்த அய்யர் 1920, 1927இல் மறுபதிப்புக்களை வெளியிட்டார்.

1898இல் மணிமேகலையை வெளியிட்ட அய்யர் 1921, 1931இல் மறு பதிப்புக்களை வெளியிட்டார்.

1924இல் பெருங்கதையை வெளியிட்ட அய்யர் 1935இல் மறுபதிப்பினை வெளியிட்டார்.

முதல் பதிப்பிற்குப் பின்னர்க் கிடைத்த சுவடிகளைக் கொண்டும், தம் அனுபவத்தைக் கொண்டும் பாடம்

---

9. என் சரித்திரம், ப.638, பெருங்கதை முன்னுரை, ப.35.

10. உ.வே.சா., காப்பியப் பதிப்புகள், ப.19.

கொள்வதிலும், உரையிலும், விளக்கத்திலும், குறிப்புரையிலும் பல்வேறு வகையான திருத்தங்களையும் மாற்றங்களையும் செய்தார். கையில் ஒரு குறிப்பேட்டை வைத்துக் கொண்டே தெரிந்த புரிந்த மாற்றங்களைச் செய்தார். அரும்பத முதலியவற்றின் அகராதி முதலியனவும் விரிவும், விளக்கமும் பெற்றன.

**உதயண குமார காவியம்**

இதனைப் பெருங்கதையின் சுருக்கம் என்று அய்யர் கூறுவார். காவியம் என்று கூறப்பட்டாலும் காவிய இலக்கணம் உடையது அன்று என்றும் கூறுவார்.

**சீவகசிந்தாமணிப் பதிப்பில் ஈடுபாடும் ஏற்பட்ட இன்னல்களும்**

சேலத்தில் இராமசாமி முதலியார் மிட்டா, ஜமீன்தார் பரம்பரையைச் சேர்ந்தவர். நீதிபதியாக வேலை பார்த்தவர். அரியலூரிலிருந்து கும்பகோணத்திற்கு மாறுதலாகி வந்திருந்தார். தமிழிலும் சங்கீதத்திலும் வடமொழியிலும் தேர்ந்தவர். அவரைச் சந்தித்தமை பற்றி அய்யர் பின்வருமாறு கூறுகிறார்.

'அவரிடம் என் நல்லூழ் என்னைக் கொண்டு போய்விட்டது. அவருடைய நட்பினால் என் வாழ்க்கையில் புதுத்துறை தோன்றியது. தமிழ் இலக்கியத்தின் விரிவை அறிய முடிந்தது. அந்தாதி, கலம்பகம், பிள்ளைத்தமிழ், உலா, கோவை முதலிய பிரபந்தங்களிலும், புராணங்களிலும் தமிழ் இன்பம் கண்டு மகிழ்வதோடு நில்லாமல் பழமையும், பெருமதிப்புமுடைய தண்டமிழ் நூல்களில் பொதிந்து கிடக்கும் இன்றமிழியற்கை யின்பத்தை மாந்தி நான் மகிழ்வதோடு பிறரும் அறிந்து இன்புறச் செய்யும் பேறு எனக்கு வாய்த்தது' என்பது அய்யர் அவர்கள் எழுதிய பகுதியாகும்.[11]

சேலம் இராமசாமி முதலியாரிடம் சீவகசிந்தாமணி காகிதப்பிரதியையும், திருவாவடுதுறை ஆதீனத்தில் மீனாட்சி சுந்தரம்பிள்ளையவர்கள் எழுதி வைத்திருந்த பிரதியையும் வேறு இடங்களில் கிடைத்த பிரதிகளையும் கொண்டு சமண சமயப் பெரியார்கள் கூறிய செய்திகளால் பல ஐயம் நீங்கப் பெற்றுச் சீவகசிந்தாமணிப் பதிப்பை நச்சினார்க்கினியர் உரையோடு பதிப்பிக்க அய்யர் அவர்கள் பணிகளைத் தொடங்கினார்கள்.

---

11. என் சரித்திரம், ப.528.

அப்போது அவருக்கு வந்த பல்வேறு இடையூறுகளைக் கண்டு தளராமல் உறுதியுடன் ஊக்கம் மிகக்கொண்டு சிந்தாமணிப் பதிப்பை முடித்தார்கள். இராமசாமி முதலியார் அவர்களுக்குப் பாடம் சொல்லியதாலும், சமணர்களுடைய தொடர்பாலும் சிந்தாமணி நயத்தை அய்யர் உணரலானார்.

> 'சிந்தாமணியின் அருமை வரவர எனக்கு நன்கு புலப்படலாயிற்று. செந்தமிழ்க் காவியங்களுக் கெல்லாம் அதுவே உரையாணி என்பதை அறிந்து கொண்டேன். அதனுடைய போக்கிலே உள்ள கம்பீரமும் சொல்லாட்சிச் சிறப்பும் என் மனதைக் கவர்ந்தன'

> 'இராமசாமி முதலியாருக்குப் பாடம் சொல்லுவதாக ஆரம்பித்த சிந்தாமணி ஆராய்ச்சி வரவர எனக்கு இன்பம் தரும் ஒரு பொழுதுபோக்காகி விட்டது காலேஜிலும் வீட்டிலும் பாடம் சொல்லும் நேரம் போகச் சிந்தாமணியைப் படிப்பதிலே ஆழ்ந் திருந்தேன்'

என்பன அய்யர் எழுதிய தொடர்களாகும்[12], இராமசாமி முதலியார் வேண்டுகோளுக்கிணங்கச் சிந்தாமணி பதிப்பிக்கும் முயற்சியை மேற்கொண்டார்.

சிந்தாமணி முழுவதையும் குறிப்புப் புத்தகங்களில் எழுதி வைத்துக்கொண்டு பல சுவடிகளையும் பார்த்துப் பாடபேதங்களைக் குறித்துக் கொண்டார். வீட்டில் பாடம் கேட்ட மாணவர்களையும், கல்லூரி மாணவர்களையும் வைத்துக் கொண்டு பிரதிகளை ஒப்பு நோக்கினார். ஒரே சமயத்தில் நான்கைந்து மாணவர்கள் ஆளுக்கு ஒரு பிரதியை வைத்துக்கொண்டு பார்க்கும்போது வேலை மிகவும் வேகமாக நடைபெற்றது.

கீழ்வரும் அய்யர் தொடர்கள் சிந்தாமணிப் பதிப்பில் அவருக்கிருந்த ஈடுபாட்டைக்காட்டும்.

'சிந்தாமணியிலும் அதன் உரையிலும் மூழ்கியிருந்த எனக்கு மற்ற வேலைகளில் மனம் செல்லவே இல்லை. அந்நூலின்

12. மேலது, ப.541.

புதுமைச் சுவையை நுகர்ந்து நுகர்ந்து இன்புற்றேன். அதனைப் படிக்கப் படிக்கப் பிற்காலத்து நூல்கள் எல்லாம் எவ்வளவு தூரம் அந்தக் காவியத்திலிருந்து காவிய மரபுகளை அறிந்து அமைத்துக் கொண்டுள்ளன என்பது நன்கு விளங்கிற்று.[13]

'அடிக்கடி ஆய்ந்து வந்தமையால் என் நினைவு முழுவதும் சிந்தாமணி மயமாக இருந்தது. அதில் என்மனம் ஆழ்ந்துவிட்டது. காலையில் நான் எழுந்தவுடன் சிந்தாமணி முகத்தில்தான் விழிப்பேன். பல் தேய்த்து அனுஷ்டானம் செய்தவுடன் ஆகாரம் பண்ணுவேனோ இல்லையோ சிந்தாமணியை ஆராய்வேன். காலேஜிற்குப் போக நேரமாய் விடுமோ என்று கருதமாட்டேன். காலேஜில் அடிக்கும் முதல்மணி என் காதில் விழுந்து சிந்தாமணியிலிருந்து என் கருத்தை வலியப் பிடித்து இழுக்கும். அவசர அவரசமாகச் சாப்பிட்டுவிட்டுப் புறப்படுவேன். சில நாட்களில் சாப்பிடாமலே போய்விடுவேன்.[14]

தனிமையிலே திருத்தக்கதேவர் என்னை எங்கெல்லாமோ அழைத்துச் செல்வார். இராசமாபுரத்துக் காட்சிகளைக் காட்டுவார். சச்சந்தனின் அந்தப்புரத்திற்கு அழைத்துப் போவார். கட்டியங்காரனுடைய செயல்களை எடுத்துச் சொல்லுவார். சீவகன் பேசுவான். விளையாடுவான். வீரச் செயல்புரிவான். இன்ப விளையாட்டிலே ஈடுபட்டிருப்பான். காந்தருவதத்தை காட்சியளிப்பாள். குணமாலை தோன்றுவாள். என் உடம்புதான் இரவில் தனியாக இருக்குமேயன்றி என் மனம் சிந்தாமணிப் பிரபஞ்சத்தில் விரிந்த இடங்களையும் நீண்ட கால நிகழ்ச்சிகளையும் அளவிட்டு இன்புறும்'

மேற்கண்ட அய்யரின் கூற்றுக்களிலிருந்து சிந்தாமணியில் அவர் கொண்ட அளவற்ற ஆழ்ந்த ஈடுபாடு தெரிகிறது. சிந்தாமணியை ஆய்வு செய்யும்போதும், சிந்தாமணி ஏடுகள் தேடும்போதும் அய்யருக்குச் சங்க இலக்கியப் பாடல்கள் பழக்கமாயின. சங்க இலக்கிய ஏடுகளையும் பெற்றார்.

சிந்தாமணி ஆய்வு செய்யும்போது அய்யர் அவர்கட்கு ஏற்பட்ட இடையூறுகள் பல. அவற்றால் மனம் தளராது அஞ்சாமல் புதிய ஊக்கத்தோடு முனைந்து செயல்பட்டுச் சீவகசிந்தாமணிப் பதிப்பை வெளியிட்டார்கள்.

---

13. மேலது, ப549.

14. மேலது, ப569.

சி.வை. தாமோதரம் பிள்ளை அவர்கள் பதிப்புத் துறையில் முன்னோடியாவார். கும்பகோணத்தில் தங்கி வழக்கறிஞர் தொழிலில் இறுதி நாட்களில் ஈடுபட்டிருந்த சி.வை. தாமோதரம்பிள்ளை அவர்கள் அய்யர் சிந்தாமணி பதிப்பிப்பதைக் கேள்விப்பட்டார். ஒருநாள் அய்யர் வீடு வந்து சிந்தாமணியைத் தான் பதிப்பிக்க இருப்பதாகவும் தமக்கு கொழும்பு இராமநாதன் பொருள் உதவி செய்வதாகவும், அய்யரால் இப்பணி முடியாது என்றும் அய்யர் அவர்கள் ஆய்வு செய்து எழுதி வைத்திருந்த இரண்டு பெரிய காகிதக் கட்டுக்களை வாங்கிக் கொண்டு சென்றுவிட்டார். அய்யரைக் கம்ப இராமாயணம் பதிப்பிக்குமாறு தாமோதரம்பிள்ளை கேட்டுக்கொண்டார். அடுத்த நாள் காலை சென்றுதான் அய்யர் தாமோதரம்பிள்ளை அவர்களிடமிருந்து அவற்றை வாங்கிவந்தார்.

சிந்தாமணிக்காப்பியம் அறிமுகம் ஆவதற்கும், பதிப்பிப்பதற்கும் மூல காரணமாக இருந்த சேலம் இராமசாமி முதலியார் அவர்களே ஒருமுறை அய்யரிடம் சிந்தாமணியைப் பதிப்பித்துச் சிரமப்படவேண்டாம் வசதிபடைத்த சி.வை. தாமோதரம்பிள்ளையிடம் அப்பொறுப்பை விடுமாறு கேட்டுக்கொண்டார்.

சென்னையில் வாழ்ந்த தமிழ் அறிஞர்களில் முக்கியமானவர் புரசைவாக்கம் அட்டாவதானம் சபாபதி முதலியார். அவர் ஒருநாள் அய்யரிடம் 'என்ன அய்யா, சிந்தாமணி உரையையாவது நீங்கள் பதிப்பிக்கிறதாவது. அது சுலபமான காரியமா? நீங்கள் பால்யர். சிந்தாமணி நூலுக்கும் உரைக்கும் உள்ள பெருமை என்ன? அதை முடிப்பது மிகவும் கஷ்டமாக இருக்குமே.' அந்த முயற்சியை நிறுத்திக் கொள்வது மிகவும் நல்லது. ஆழந்தெரியாமல் காலை விடக்கூடாது' என்று கூறினார்.

அதுமட்டுமல்ல அவர் சிந்தாமணி பதிப்பைத் தொடங்கிக் கைவிட்டவர் பட்டியலையும் கூறினார். அவரும் அவருடைய ஆசிரியர் காஞ்சிபுரம் சபாபதி முதலியாரும் சிந்தாமணியைப் பதிப்பிக்கத் தொடங்கிக் கஷ்டம் என்று விட்டு விட்டதாகக் கூறினார். ட்ரூ பாதிரியார் சிந்தாமணி பதிப்பிப்பதாக விளம்பரம் செய்து முயற்சியைத் தொடங்கிக் கைவிட்டுவிட்டார். யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலரும் சிந்தாமணி பதிப்பிக்க எண்ணினார். திருச்சிற்றம்பலக் கோவையார் முதல் பதிப்பில் அந்த எண்ணத்தை வெளியிட்டார். அவராலும் முடியவில்லை. மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்களும்

சோடசாவதானம் சுப்பராய செட்டியாரும் சேர்ந்து சிந்தாமணியைப் பதிப்பிக்க எண்ணி முயற்சியைக் கைவிட்டார்கள்.[15]

யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலரின் மருமகன் பொன்னம்பலம்பிள்ளை சிந்தாமணி பதிப்பிப்பதாக விளம்பரம் வந்தது. இருபது பாரங்கள் அச்சிட்டு-விட்டதாகவும் தகவல் வந்தது. இதனை யாழ்ப்பாணம் சதாசிவபிள்ளை அய்யரிடம் கூறினார்.

சீவகசிந்தாமணிக்குப் பணம் தருவதாகக் கையொப்பம் இட்டிருந்த கனவான் ஒருவர் 'சாமிநாதையர் பதிப்பு பிழையாக இருக்கும். வேறொருவரின் நல்ல பதிப்பை வாங்கிக் கொள்கிறேன். என்று கூறிப் பணம் தரமறுத்துவிட்டார்.

சிந்தாமணிப் பதிப்பிற்குப் பணம் தருவதாகக் கையொப்பமிட்டிருந்த பலருக்கு அய்யர் பதிப்பில் குறையிருப்பதாகவும், அய்யர் அவர்களுக்குச் சிந்தாமணி பதிப்பிக்கும் தகுதி இல்லை என்றும் சிலர் கடிதம் அனுப்பினர்.

இராமநாதபுரம் அரசர் பாஸ்கரசேதுபதி அவர்கள் அய்யர் அவர்கட்குப் பல வகையில் உதவிகள் புரிந்துவந்தனர். அவரிடம் சிலர் சென்று சிந்தாமணியைப் பதிப்பிக்கும் தகுதி அய்யர் அவர்கட்கு இல்லை என்று கூறியிருக்கிறார்கள். பூண்டி அரங்கநாத முதலியாரிடம் அவர் அதைக் கூறியுள்ளார்.

பூண்டி அரங்கநாத முதலியார் மிக முயன்று அய்யர் அவர்கள் நன்மைக்காகச் சிந்தாமணியில் நாமகள் இலம்பகம் பகுதியை பி.ஏ. தேர்வுக்குப் பாடமாக வைக்க ஏற்பாடு செய்தார். அதை அச்சிட்டு விற்றால் அய்யர் அவர்கட்குப் பொருள் ஓரளவு கிடைக்கும். அது சிந்தாமணிப் பதிப்பிற்குப் பயன்படும் என நினைத்தனர்.

சோடசாவதானம் சுப்பராய செட்டியார் அய்யர் அவர்களுக்குச் சிந்தாமணி பதிப்பிக்க உதவி செய்தார். அவர் அய்யருக்கும், பிறருக்கும் தெரியாமல் அய்யர் பதிப்பித்துக் கொண்டிருக்கும் நாமகள் இலம்பகப் பகுதியைத் தன் பெயரில் அச்சிட்டுப் புத்தகமாக வெளியிட்டு விட்டார்.

15. மேலது, ப584.

திராவிட ரத்னாகரம் அச்சுக்கூடத்தில் பதிப்பித்த சிந்தாமணிப் படிவப் பிரதிகளைப் பணம் கொடுத்து இரகசியமாகப் பெறவும் சிலர் முயன்றனர். திருவாவடுதுறை ஆதீனத்தில் கூடப் 'பொய்யே இட்டுக்கட்டிய சிந்தாமணியை ஆதீனத்தின் தொடர்புடைய அய்யர் பதிப்பிக்கலாமா? அது சமண நூல் ஆயிற்றே. சைவ மடம் அதற்கு ஆதரவு தருவது கூடாது என்ற எதிர்ப்பும் இருந்தது.

தஞ்சை சமணர் விருஷப முதலியார் போன்றவர்கள் சைவருக்குச் சிந்தாமணி ஏடு கொடுக்கக் கூடாது என்று முதலில் மறுத்தனர். இவ்வளவு எதிர்ப்புகளுக்கு இடையில் துணிந்து அஞ்சாமல் இரண்டாண்டுகளில் அய்யர் அவர்கள் சீவகசிந்தாமணிப் பதிப்பைச் சிறப்புடன் முடித்தார்.

எதிர்ப்பும் இன்னலும் ஏற்பட்டபோதும் அய்யர் தளரவில்லை. பிறர்மீது கோபிக்கவில்லை. இது குறித்து அய்யர் அவர்கள் ஒரு கட்டுரையில் கூறியிருப்பது நினைவு கொள்ளத்தக்கது.

> 'முயற்சியிடையே யாரேனும் அவமதித்தால் அதனைப் பொருட்படுத்தாமல் காரியத்தைச் செய்து வரவேண்டும். நம்முடைய மனமறிய நற்காரியத்தை மேற்கொண்டு கடமையைச் செய்துவந்தால் இறைவன் அருளால் முடிவில் நன்மையே கிடைக்கும் என்பதில் ஐயமில்லை.
>
> பிறர் செய்த குற்றத்தை மறந்துவிடுதலும் பலரிடையே எடுத்துக் கூறாமையும் நன்மை பயக்கும். நன்மையும் தீமையும் கடவுளால் நம் வினைக்கேற்ப அமைந்தன வென்று எண்ண வேண்டும். ஆதலின் தீமை செய்தாரென்று நெஞ்சில் பகையுற்று யாரையும் கடிதல் ஆகாது. தெய்வம் நன்மையையே உண்டாக்கும் என்ற நம்பிக்கை உறுதிப்படவேண்டும். அது பலவிதமான இடையூறுகளை எளிதில் வெல்லக்கூடிய வன்மையை அளிக்கும்'

என்பது அய்யர் அவர்கள் உரையாகும். இதனால் அய்யர் அவர்களின் மனப்பக்குவமும், இன்னா செய்தாரைக் கடிந்துரையாத தன்மையும் நன்கு புலப்படுகிறது.

# 4. இலக்கண நூல்கள்

## அய்யர் பதிப்பித்த இலக்கண நூல்கள்

ஏறக்குறைய நூறு புத்தகங்கள் பதிப்பித்த அய்யரவர்கள் பதிப்பித்த இலக்கண நூல்கள் நான்கேயாகும். அவை புறப்பொருள் வெண்பாமாலை (1895), நன்னூல் மயிலைநாதர் உரை (1918), நன்னூல் சங்கர நமச்சிவாயர் உரை (1925), தமிழ் நெறி விளக்கம் (1937) என்பனவாம்.

'தமிழ் நெறி விளக்கம்' 1936 ஆம் ஆண்டு ஆகஸ்டு முதல் 1937 மார்ச்சு மாதம் வரை கலைமகள் இதழ்களில் தொடர்ச்சியாக வெளிவந்து பின் நூலாயிற்று. தனிப்பதிப்புக்காக எடுத்துக் கொண்ட மூன்று இலக்கண நூல்களில் இரண்டு நன்னூல் பதிப்பு என்பது சிறப்புக்குரியது.[1]

## நன்னூல் கற்கும் ஆர்வம்

தமிழ் இலக்கணம் பயில்வார் நன்னூலையே சிறப்பாகக் கற்பர். நன்னூல் கற்றோருக்கு நன்கு மதிப்பும் இருந்தது. நன்னூலின் பெருமை குறித்தும், அதை அய்யரவர்கள் கற்க முயன்றது குறித்தும் பின்வருமாறு எழுதியுள்ளார்கள்.

'அக்காலத்தில் நன்னூலுக்கு நல்ல மதிப்பு இருந்தது. ஐயமற அதனை ஒருவன் தெரிந்து கொண்டால் அவனை நல்ல புலவன் என்று யாரும் கூறுவர். சூத்திரங்களின் விசேஷ உரைகளிலுள்ள ஆக்ஷேப சமாதானங்களை நன்றாகத் தெரிந்து கொண்டு விளக்குபவர்கள் சிலரே இருந்தனர். இலக்கிய பயிற்சியிலேயே பெரும்பாலோருக்குக் கவனம் சென்றதேயன்றி இலக்கணப் பயிற்சியில் செல்லவில்லை. இந்த நிலையில் நான்

---

1. டாக்டர் உவே.சா., இலக்கணப் பதிப்புகள், ப.14.

நன்னூல் சூத்திரங்களையும் உரையையும் மனனம் பண்ணித் தமிழில் இலக்கணவித்துவான் ஆகக் கூடுமென்ற எண்ணம் என்னைக் கண்டோருக்கு உண்டாக்கினேன்.[2]

**நன்னூல் பாடம் கேட்டல்**

பெற்றோருடன் கார்குடி என்னும் ஊருக்குச் சென்று சீனிவாச அய்யங்கார் வீட்டில் தங்கிக் கஸ்தூரி அய்யங்கார் என்பவரிடம் அய்யரவர்கள் நன்னூல் பாடம் கேட்கத் தொடங்கினார். அப்போது அவருக்கு வயது பன்னிரண்டு.

கஸ்தூரி அய்யங்கார் நன்னூலில் நல்ல பயிற்சி உடையவர். விசாகப் பெருமாள் அய்யர் இயற்றிய நன்னூல் காண்டிகை உரையைப் பாடம் சொல்லி அதன் கருத்துரை, விசேஷ உரை முதலியவற்றை அய்யருக்கு அவர் சொல்லி வந்தார். அய்யர் நன்னூலை நன்கு கற்றுத் தேர்ந்தார். அப்போது அய்யர் அவர்கள் 'தினந்தோறும் நன்னூல் முழுவதையும் ஒரு முறை நான் பாராமல் சொல்லி வந்தேன்' என்று கூறுவதிலிருந்து அவருக்கு நன்னூல் மீதிருந்த பற்று நன்கு தெரிகிறது. அய்யர் அவர்கள் தம் வரலாற்றில் 'நிலவில் பொருள்கள் காணப்படுவதுபோல் நன்னூலிலுள்ள இலக்கணங்கள் எனக்குத் தோற்றின' என்று கூறுகிறார்கள்.

சொந்த ஊரான உத்தமதானபுரத்தில் தங்கிச் சிலகாலம் இருந்தபோது பாபநாசம் சென்று இராகவையர் என்பவரிடம் நன்னூல் காண்டிகை உரையைப் பாடம் கேட்டார். இராகவையர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையிடமும், தியாகராச செட்டியாரிடமும் பாடம் கேட்டவர். தியாகராச செட்டியாருக்கு நன்னூல் மீதிருந்த பற்றையும் பெரும்புலமையையும் இராகவையர் அய்யருக்கு எடுத்துரைத்தார்.[3]

திருவாவடுதுறை மடத்தில் சேர்ந்தபின் முதலில் அவர்களிடம் படிக்கத் தொடங்கிய நூல்களில் நன்னூல் விருத்தி உரையும் ஒன்று. அப்போது உடன் பயின்ற மாணவர்களிடம் கேள்வி கேட்டு அய்யர் அவர்களைத் திணற அடிப்பதும் உண்டாம். பிள்ளையவர்களிடம் விசாகப் பெருமாளய்யரின் பாலபோத இலக்கணத்தைப் பாடம் கேட்டபோது அய்யருக்கு நன்னூல் பயிற்சி மிகவும் உதவிற்று.

---

2. என் சரித்திரம், ப.105.

3. என் சரித்திரம், ப.132.

**சுப்பிரமணிய தேசிகரிடம் நன்னூல் விருத்தியுரை பாடம் கேட்டல்.**[4]

திருவாவடுதுறை ஆதீனகர்த்தர் சுப்பிரமணிய தேசிகரிடம் நன்னூல் சங்கரநமச்சிவாயரின் விருத்தியுரை முழுவதையும் அய்யர் பாடம் கேட்க விரும்பினார். அப்போது ஆதீனகர்த்தர் தேசிகர் அவர்கள் 'நன்னூலுக்கு முதலில் சங்கரநமச்சிவாயர் உரை எழுதினார். பின்னர் சிவஞான முனிவர் சங்கரநமச்சிவாயரின் விருத்தியுரையைத் திருத்தியும் புதுக்கியும் விருத்தி உரையை அமைத்தார். அவர் தாம் எழுதிய சிவஞானபோத திராவிட மகாபாஷ்யத்தில் அமைந்துள்ள வடமொழி, தென்மொழிப் பிரயோகங்களை எளிதில் எதிர்காலத்தவர்க்குப் புலப்படுத்த நினைத்து, இலக்கணக்கொத்து, தொல்காப்பியம் சூத்திரவிருத்தி, இலக்கண விளக்கச் சூறாவளி என்னும் நூல்களில் உள்ள முக்கியமான சிலவற்றைச் சேர்த்தார். சில இடங்களில் சிலவற்றைக் குறைத்தும், சிலவற்றை மாற்றியும் எழுதி நிறைவேற்றினார். இலக்கணக் கொத்து முதலிய மூன்றையும் பாடம் கேட்ட பிறகுதான் நன்னூல் விருத்தியுரை தெளிவாக விளங்கும்' என்றார். தேசிகர் விருப்பப்படி சிவஞான முனிவரின் மேற்கண்ட மூன்று நூல்களையும் பாடம் கேட்ட பின்னர்த் தேசிகரிடம் நன்னூல் விருத்தியுரையை அய்யர் அவர்கள் பாடம் கேட்டார்கள்.

சங்கரநமச்சிவாயர் அவர்கள் விருத்தியுரையைப் பாடம் கேட்டபோது அவ்வுரையில் சிவஞான முனிவரின் விளக்கப்பகுதிகள் 'சி' என்று அடையாளமிட்டு அய்யர் படித்திருக்கிறார். சிவஞானமுனிவர் திருத்திய பகுதிகளையும், சிவஞான முனிவர் விளக்கவுரைப் பகுதி இல்லாத சங்கரநமச்சிவாயர் உரையையும் அய்யர் வேறுபாடு கண்டு படித்துள்ளார். இது பின்னர் அய்யர் அவர்கள் பதிப்பித்த நன்னூல் சங்கர நமச்சிவாயர் விருத்தியுரைப் பதிப்புக்கு மிகவும் பயன்பட்டது.[5]

பின்னர் ஒருமுறை நன்னூல் விருத்தியுரை முழுவதையும் பரமசிவத் தம்பிரான் என்பவரிடம் அய்யர் பாடம் கேட்டுள்ளார். இவ்வாறு கஸ்தூரி அய்யர், இராகவையர், மீனாட்சி சுந்தரம்பிள்ளை, சுப்பிரமணிய தேசிகர், பரமசிவத் தம்பிரான் ஆகிய ஐவரிடம் பாடம் கேட்ட பழுத்த அனுபவம்

4. மேலது, ப.403.
5. டாக்டர் உவே.சா., இலக்கணப்பதிப்புகள், ப73.

இருந்த காரணத்தால் அப்பெரும் புலமையுடன், பயிற்சியுடன் நன்னூல் பதிப்புக்களில் அய்யர் ஈடுபட்டார். கும்பகோணம் கல்லூரியில் பயிலும் பி.ஏ. இரண்டாம் ஆண்டு மாணவர்கட்கு அய்யர் அவர்கள் நன்னூல் பாடம் நடத்தினார். அவர் பாடம் நடத்தும் பாங்கினைத் தியாகராச செட்டியாரும், தமிழ் அறிஞரான கல்லூரி முதல்வர் கோபாலராவும் கண்டறிந்து மிகவும் பாராட்டினர்.

### அனுபவ முதிர்ச்சி

நன்னூல் மயிலைநாதர் உரை பதிப்பிக்கும்போது அய்யர் அவர்கட்கு வயது 63. நன்னூல் சங்கரநமச்சிவாயர் உரை பதிப்பிக்கும்போது வயது 70. பல்வேறு நூல்களைப் பதிப்பித்த பயிற்சி, அனுபவம், புலமை முதிர்ச்சி இவற்றால் நன்னூல் பதிப்புக்கள் மிகுந்த செப்பமுடன் வெளிவந்தன.

பொறுமையுடன் ஏடுகள் தேடுதல் பாடபேதங்கள் அனைத்தையும் குறித்துச் செம்மையான மூலபாடத்தைத் தெரிவு செய்தல், ஒப்புமைப் பகுதிகளைக் காட்டல், தகுந்த மேற்கோள்கள் காட்டல், பல்வேறு வகையான நூல் தொடர்புடைய அகராதிகளைத் தொகுத்தல், முன்னுரையாக ஆய்வுரை எழுதுதல், விளங்கா மேற்கோள்களைத் தனியாகச் சுட்டிக் காட்டுதல், அரிய அகராதிச் சொற்களுக்குப் பொருள் கூறுதல், கிடைத்த ஏடுகள் பற்றிய விபரம் கூறல் ஆகியவை அய்யர் அவர்களின் பதிப்பு நெறியாகும். அய்யர் அவர்களின் பதிப்புகளில் அவருடைய தனி முத்திரைகளைக் காணலாம்.

தமிழ் கற்கும் ஆர்வம் உடைய மாணவர்கள் 'அய்யர் அவர்கள் இந்த நூலுக்குப் பதிப்பு வெளியிடாமல் போய்விட்டார்களே என ஏங்கும் நிலை ஏற்பட்டுவிட்டது.

### மூன்று நிலைகள்

அய்யர் அவர்களின் இலக்கணப் பதிப்புக்களையும், ஏனைய பதிப்புக்களையும் நோக்கும்போது மூன்று நிலைகளை அறிகிறோம். ஒன்று எவரும் இது வரை வெளிவராத நூல்களை அச்சிடுதல், இரண்டு பிறர் அச்சிட்ட நூலாயினும் உரை இல்லாமலும், பிற குறைகள் உள்ளதுமான நூல்களைக் குறைகள் நீக்கிச் செம்மையான முறையில் வெளியிடல், மூன்று நீண்ட நாள் அனுபவத்தால் அதன் பயனால் நூலை வெளியிடல் என அறிஞர் கி. நாச்சிமுத்து அவர்கள் அய்யர் பதிப்பை மூன்று வகையாகப்

பிரிக்கிறார். இவ்வகையில் நன்னூல் மயிலைநாதர் உரையையும், சிவஞான முனிவரின் மாற்றம் சேர்க்கை இல்லாமல் சங்கர நமச்சிவாயரின் உரையை மட்டும் முதலில் பதிப்பித்த பெருமை அய்யர் அவர்கட்கே உண்டு.

## நன்னூல் மயிலைநாதன் உரைப்பதிப்பு

எழுத்து, சொல் இலக்கணத்தைக் கூறும் சிறந்த இலக்கண நூல் நன்னூல். நன்னூல் தான் தோன்றிய காலத்திலிருந்து இன்றுவரை மிகச்சிறப்பாக இலக்கணம் பயில்வாரிடையே உயிரோட்டமுள்ள ஒரு நூலாக நின்று நிலவுகிறது.

### வழிநூல்

நன்னூல் 48 ஆம் நூற்பா உரையில் மயிலைநாதர் தன்மையால் பெயர்பெற்ற நூலுக்கு நன்னூல் பெயரை எடுத்துக்காட்டுகிறார். அய்யரவர்கள் மயிலைநாதர் உரை விளக்கமுள்ள நூற்பா 62,90 ஆகிய இரண்டையும் மேற்கோள் காட்டி 'நன்னூல் எதிர்நூல் அன்று தொல்காப்பியம் முதலியவற்றை நோக்கும்பொழுது வழி நூலாகவும், அகத்தியத்தை நோக்கும்பொழுது சார்பு நூலாகவும் இது கருதப்படும்' என எழுதியுள்ளார்கள்.[6]

### மயிலைநாதர் உரை மீது அய்யருக்கு ஆர்வம் ஏற்படல்

சுவாமிநாத தேசிகர் 'சேற்று நிலத்தில் கவிழ்ந்த பால், தேன், நெய் முதலியனவும் சேறு ஆனாற்போல நன்னூல் சூத்திரமும் அவ்வுரையுடனே கலந்து குற்றப்பட்டது என்க' என்று நன்னூல் மயிலைநாதர் உரையையும், மயிலைநாதரையும் கண்டிக்கிறார். அதனால்தான் தன் மாணவர் சங்கர நமச்சிவாயரைக் கொண்டு நன்னூலுக்கு விருத்தியுரை எழுதுமாறு செய்தார் என்பர். இக்கூற்றுக்களே நன்னூல் மயிலைநாதர் உரையைத் தேடவேண்டும் என்றும், பதிப்பிக்க வேண்டும் என்றும் அய்யர் அவர்கட்கு ஆர்வம் ஏற்பட்டது என்பர்.

### பலர் உரை

நன்னூலுக்கு 44 பேருக்கு மேல் உரை எழுதியுள்ளனர் என்ற செய்தியே தமிழ்நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் எல்லாக்

6. நன்னூல் மயிலைநாதர் உரை, உவே.சா., பதிவு முன்னுரை (மூன்றாம் பதிப்பு), ப.15.

காலத்திலும் இந்நூல் மிகுதியாகப் பயிலப்பட்டது என்பதை விளக்கும்.

## பதிப்பும் காரணமும்

1886 ஆம் ஆண்டு சிவகங்கையைச் சேர்ந்த மிதிலைப்பட்டி என்னும் ஊரில் அழகிய சிற்றம்பலக் கவிராயர் வீட்டில் நன்னூல் மயிலைநாதர் உரை ஏட்டுப் பிரகியை முதன் முதலாகப் பெற்றார்.

மயிலைநாதர் உரையை அய்யரவர்கள் 1918 ஆம் ஆண்டு சென்னை வைஜயந்தி அச்சுக்கூடத்தில் பதிப்பித்தார்கள். முன்னுரைப் பகுதியைக் கமர்ஷியல் அச்சகத்தில், சொல்லடைவுப் பகுதியைப் பிரசிடென்சி அச்சகத்திலும் அச்சிடச் செய்துள்ளார்கள்.

இடைப்பட்ட 34 ஆண்டுகளில் மயிலைநாதர் நன்னூல் உரை ஏட்டுச் சுவடிகளைப் பல இடங்களில் தேடிப் பெற்றார். திருவாவடுதுறை ஆதீனம், சென்னை, மதுரை, ஆழ்வார் திருநகரி, திருநெல்வேலி, சிதம்பரம், திரிசிரபுரம், காஞ்சிபுரம் முதலிய பல இடங்களில் மயிலைநாதர் நன்னூல் உரை ஏட்டுச் சுவடிகள் பதினைந்தை அய்யரவர்கள் பெற்றதாகப் பட்டியலிட்டுள்ளார். அவற்றுள் முற்றும் உள்ளவை 6; முற்றுப் பெறாதவை 9 ஏட்டுச் சுவடிகள்.

## முதல் உரை

நன்னூலின் முதல் உரையாசிரியர் மயிலைநாதரே என்பது ஐயரவர்கள் துணிவு. 'மயிலை நாதர் உரையில் சில இடங்களில் 'உரைப்பாரும் உளர்' 'கூறுவாரும் உளர்' என்று வந்துள்ள பகுதிகளைக் கொண்டு இவ்வுரைக்கு முன் நன்னூலுக்கு வேறு உரை இருந்திருக்க வேண்டும் என்று சிலர் ஊகித்தல் கூடும்' என எழுதிய ஐயரவர்கள் அதனை மறுத்து 'நன்னூலுக்கு இப்போது வழங்கிவரும் உரைகளில் இதுவே பழமையானதென்று தெரிகிறது' என்று எழுதியுள்ளார்கள். தன் முகவுரைப் பகுதியில் நன்னூலுக்கு முதன் முதலில் செய்யப் பெற்றது மயிலைநாதர் உரை என எழுதியுள்ளார்கள். அறிஞர் பவானந்தம்பிள்ளை அவர்களுக்கும் இதே கருத்து உண்டு.

அதுமட்டுமல்ல இலக்கண விளக்க உரை, நன்னூல் விருத்தியுரை ஆகியவற்றிற்கு ஆதாரமாக உள்ளது மயிலைநாதர் உரையே எனவும் அய்யர் எழுதியுள்ளார்.

அய்யரவர்கள் 1918இல் நன்னூல் மயிலைநாதர் உரையைப் பதிப்பிக்கு முன்னரே நன்னூல் பதிப்புக்கள் பல வெளிவந்திருப்பினும் தான் மயிலைநாதர் உரையைப் பதிப்பிப்பதற்குப் பின்வரும் காரணங்களைக் கூறுகிறார்.

'இந்த மயிலைநாதர் உரை சில நூற்றாண்டுகளாகப் படிப்பாரும் படிப்பிப்பாருமின்றிப் பெயர் வழக்கமும் அற்றுக் கிடந்தமையாலும், சிலசில பகுதிகள் பிற்காலத்தவரால் மறுக்கப்பட்டிருப்பினும் தமிழ்நாட்டின் பழைய நிலையையும் அக்காலத்துப் புலவர்களுடைய கோட்பாடுகளையும் இவை போன்ற அரிய பலவற்றையும் தெரிவித்தலாலும் இதனைப் பதிப்பிக்கத் துணிந்தேன்!' என்பது அய்யரவர்களின் முகவுரையில் காணப்பெறும் பகுதிகளாகும்.

மயிலைநாதர் உரை அதிகமாகப் பயிலப் பெறாமைக்குக் காரணம் அது சமணர் உரை என்பதாக இருக்கலாம் என்று கருதிய அய்யரவர்கள். 'நன்னூலுக்குச் சைனர் உரையென்று ஒன்றுண்டு; அது பயனற்றது' என்று கன்ன பரம்பரையாகக் கூறப்பட்டு வரும் செய்தியை மேற்கோள் காட்டுகிறார்.

## பதிப்புமுறை

விரிவான முகவுரையில் சுவடிகள் பற்றிய விபரம் அளித்துள்ளார். பின்னர் நூலாசிரியர் வரலாறு, நூல், உரையாசிரியர் வரலாறு இவற்றை அவர் காலத்தில் கிடைத்த வரலாற்றுச் சான்றுகளை உரிய இடங்களில் குறித்துள்ளார். நூற்பாக்கள் விளங்குதற் பொருட்டுச் சந்திபிரித்துப் பதிப்பித்துள்ளார்.

அரும்பத அகராதியை இறுதியில் இணைத்து அவை எழுதப்பெற்றதன் காரணத்தையும் விளக்குகிறார்.

'இப்புத்தகத்தின் இறுதியில் உள்ள அரும்பதம் முதலியவற்றின் அகராதியில் இந்நூல் மூலம், உரை, மேற்கோள் என்பவற்றிற் கண்ட அரிய மொழிகளும் விஷயங்களும் சிறிய வாக்கியங்களும் சேர்க்கப்பட்டுள்ளன. விரிவஞ்சி எல்லாச் சொற்களுக்கும் பொருளெழுதவில்லை; இந்தப் புத்தகத்தைக் கொண்டு வேறு நூல்களையும், அவற்றைக் கொண்டு இதனையும் ஆராய்ந்து உண்மை காணுதற்குக் கருவியாகவே இவ்வகராதி எழுதப்பெற்றது.

நூல் பதிப்பிற்குப் பின்னரும் தன்னிடமுள்ள கைப்புத்தகம் ஒன்றில் அந்நூலுக்குரிய சேர்க்கை, மாற்றம், நீக்கங்களைத் தவறாமல் குறித்துவைப்பது அய்யர் வழக்கம். அதன்மூலம் அய்யர் அவர்கள் மறைவிற்குப் பின்னர் வெளிவந்த இரண்டாம் பதிப்பில் (1946) சில சேர்க்கைகளும் திருத்தங்களும் செய்யப்பட்டுள்ளன.

மூலம், உரை, மேற்கோள்களில் காணப்படும் முக்கியப் பிரதிபேதங்களைக் குறித்துள்ளார். மேற்கோள்களில் பாட வேறுபாடுகள் இருப்பினும் பண்டைக் காலத்து வழங்கிய பாடத்தைத் தெரிவிக்கக் கருதி உள்ளவாறே அவற்றைப் பதிப்பித்துள்ளார். சில நூற்பாக்களில் இக்காலத்து வழங்கும் பாடங்களுக்கு வேறாக இருப்பினும் அப்படியே பதிப்பித்துள்ளார்.

சங்கரநமசிவாயர் அவர்களின் உரைதோன்றிய பின்னரே மயிலைநாதர் உரை படிக்கும் வழக்கம் வீழ்ந்திருக்கவேண்டும் என்று முனைவர் நாச்சிமுத்து அவர்கள் கருதுகிறார்கள்.[7]

உரைவாக்கியங்களும், மேற்கோள்களும் சந்தேகத்துக்கு இடமாக இருந்தும் பிரதிகளின் சிதைவு, வேறுபாடு முதலியவற்றால் உரையாசிரியருடைய கருத்து விளங்காதது பற்றி அவற்றைத் திருத்திப் பதிப்பிப்பதற்கு அவர் மனம் இடம் தராததால் உள்ளவாறே பதிப்பித்துள்ளார்.

சிலசொற்கள் பிரதிகளில் பல இடங்களில் பலவாறாகக் காணப்பட்டாலும், பிழையென்று தோன்றாமையாலும் அவை இருந்தவாறே காட்டப்பட்டுள்ளன என்று கூறிச் சில மேற்கோளையும் காட்டுகிறார்.

**அவிநயம், அவினயம், அவினையம்;**

**புறநடை, புறனடை;**

**பருதி, பரிதி**

என்பன அவை.[8]

---

7. டாக்டர் உவே.சா., இலக்கணப்பதிப்பு, ப.5.

8. இரண்டாம் பதிப்பு (1946), எஸ். கலியாணசுந்தரையர் குறிப்பு.

## நூலாசிரியர்

நூலாசிரியர் பவணந்தி பற்றிய அரிய செய்திகளைத் தொகுத்து உ.வே.சா. அளித்துள்ளார். அவர் வரலாறு கூறும் தொடக்கத்தில்,

> **'முன்னோர் ஒழியப் பின்னோர் பாரினுள்**
> **நன்னூ லார்தமக்கு எந்நூ லாரும்**
> **இணையோ என்னும் துணிவே மன்னுக'**

என்ற இலக்கணக்கொத்து உரைப்பகுதியையும்,[9]

> **'பல்கலைக் குரிசில் பவணந்தி என்னும்**
> **புலவர் பெருமான்'**

என்ற நன்னூல் விருத்தியுரை மேற்கோள் பகுதியையும் காட்டுகிறார்.[10]

கடவுள் வணக்க நூற்பாக்களாலும், மொழிக்கு முதற்காரணம் அணுத்திரள் என்ற கோட்பாட்டாலும், உயிர்களை ஓரறிவுயிர் முதல் பிரிப்பதாலும், பவணந்தி என்ற பெயராலும் நூலாசிரியர் பவணந்தி சமணர் என்று உறுதிப்படுத்தினாலும் பிரயோக விவேக உரை, கலித்துறை போன்றவற்றில் சமணர் என்று கூறப்பட்டுள்ள பகுதியை மேற்கோள் காட்டுகிறார்.

பவணந்தி என்ற பெயருக்கு இணையாக அச்சணந்தி, வச்சணந்தி என்ற பெயர்களைக் காட்டி, 'கனகநந்தியும் புட்பநந்தியும், பவணநந்தியும்' என்ற தேவாரப் பகுதியையும் எடுத்துக்காட்டுகிறார். உ.வே.சா. அவர்கள் காட்டியவாறு சமண சமயத்தில் நந்தி கண முனிவர்கள் பலர் காணப்படுவதை வரலாற்றில் காணுகிறோம்.

வள்ளிமலைக் கல்வெட்டில்,

> **'ஸ்வஸ்திஸ்ரீ பாணராயர் குருகளப்ப**
> **பவணந்தி பட்டாரர் சிஷ்யரப்ப**
> **தேவசேன பட்டாரர் பிரதிமா'**

என உள்ள பகுதியைக் காட்டிச் சிலர், 'இச்சாசனத்திற் கண்ட

---

9. நூற்பா எட்டாம் நூற்பா உரை.

10. நூற்பா 136.

பவணந்தி பட்டாரர் என்பவர் இந்நூலாசிரியராக இருக்கக்கூடும் என்று கருதுகின்றனர்' எனக் கூறி அதை முழுமையாக ஏற்றுக்கொள்ளாமல் 'மேற்படி சாசனத்தின் காலம் விளங்காமையால் இதனை உறுதியாக எண்ணக் கூடவில்லை' என உ.வே.சா. அவர்கள் எழுதியிருப்பது அவருடைய வரலாற்றினையும், ஆழத்தையும் காட்டுகிறது.[11]

இக்கல்வெட்டு 10ஆம் நூற்றாண்டுத் தொடக்க காலத்தில் வாழ்ந்த இரண்டாம் விஜயாதித்த பாணராயன் காலத்தது; நன்னூலுக்கு முற்பட்டது. (அவன் ஆட்சிக் காலம் கி.பி. 898-910 ஆகும்).

பவணந்தி சனகை என்னும் ஊரினர். இதற்கு ஆதரவாகத் தொண்டை மண்டல சதகப் பாடலை மேற்கோள் காட்டினாலும், கொங்குநாட்டுத் திருச்செங்கோட்டு விவேக திவாகரன் ஆசிரியர் தி.அ. முத்துசாமிக் கோனார் வசம் பெற்ற இரண்டு கொங்குமண்டலச் சதகப் பாடல்களைக் காட்டி 'இச் சீனாபுரம் சீயகங்கனுடைய கங்க நாட்டிற்கு அயலதும், அவன் ஆட்சிக்கு உட்பட்டிருந்ததுமான கொங்குநாட்டில் இருத்தலாலும் சினாலயத்தைப் பெற்றிருத்தலாலும் இதுவும் அங்கீகரிக்கப்பாலதே' என உ.வே.சா. அவர்கள் எழுதியுள்ளார்.

தி.அ. முத்துசாமிக் கோனார் கொங்கு மண்டலச் சதகம் பதிப்பித்தது 1923 ஆம் ஆண்டு. ஆனால் அதற்கும் ஆறு ஆண்டுகளுக்கு முன்பே உ.வே.சா. அவர்களுக்கு தி.அ. முத்துசாமிக் கோனார் கீழ்க்காணும் பாடல்களை அளித்துள்ளார். உ.வே.சாமிநாதையர் நூலகத்தில் உள்ள உ.வே.சா. கடிதத் தொடர்புகளைக் கூறும் தமிழ்க் கருவூலத்தில் தி.அ. முத்துசாமிக் கோனாரின் இரண்டு கடிதங்கள் உள்ளன.

'கங்கக் குரிசில் உவக்க நன்னூலைக் கனிந்துபுகல்
துங்கப் புலமைப் பவணந்தி தோன்றிவளர்
கொங்கில் குறும்பு தனில்ஆதி நாத குருவிளங்கும்
மங்குற் பொழிற்சன காபுர மும்கொங்கு மண்டலமே'

'தொல்காப் பியத்தின் குணதோடம் தேர்ந்து
சொலுவதற்குத்
தொல்காப் பியம்கற்க நீண்டது அதனைச்
சுருக்கியிசை

11. Epigraphia Indica Vol. IV Page 1425;5 Sil IV 380.

**ஒல்காப் பெரும்பவ ணந்தியென்று ஓதி உபகரித்த**
**வல்கா லவன்சீய கங்கனும் வாழ்கொங்கு மண்டலமே'**

என்பவர் உ.வே.சா. காட்டிய கொங்குமண்டலச் சதகப் பாடலாகும்.

பவணந்தியை நன்னூல் பாடுமாறு கேட்ட சீயகங்கன் காலத்தைக் கல்வெட்டுச் சான்றுகொண்டு உ.வே.சா. நிறுவியுள்ளார். அதற்காக அக்காலக் கல்வெட்டாய்வாளர் தி.அ. கோபிநாதராயர் அவர்களைத் தொடர்பு கொண்டும், மதுரைச் செந்தமிழ் இதழ்களில் வெளிவந்த கட்டுரைகளைக் கொண்டும் சீயகங்கன் காலத்தை நிறுவியுள்ளார்.

பவணந்தி 'சனகைச் சன்மதி மாமுனி தந்த மைந்தன்' எனக் கூறப்படுகின்றார். உ.வே.சா. அவர்கள் மாணாக்கரை ஞான புத்திரன் என்றும், ஆசிரியரை ஞானபிதா எனச் சைனர்கள் கூறும் கன்னபரம்பரைச் செய்தியைக் கூறிச் சன்மதி முனிவர் மாணாக்கர் பவணந்தி என்று கூறுகிறார்.

இலக்கண விளக்கம் நூலாசிரியர் திருவாரூர் வைத்திய நாததேசிகர் தம் நூலுள் 250 நன்னூல் நூற்பாக்களை எடுத்தாண்டமையைக் கூறிப் பழைய நூல்களிலிருந்து பொருள்களைத் தொகுத்தல் முதலியவற்றிலும், சில்வகை எழுத்தில் பல்வகைப் பொருளைச் செவ்வன் ஆடியில் செறித்து இனிது விளக்கித் திட்ப நுட்பம் பொருந்தச் சூத்திரம் செய்வதிலும் இவர் வல்லுநர் என்பது புலப்படும்' என உ.வே.சா. எழுதியுள்ளார்.

பவணந்தி காலம் பற்றிக் கூறுகையில் கி.பி. 1178 முதல் 1216 வரை ஆட்சி புரிந்த மூன்றாம் குலோத்துங்கன் காலத்தவனான சீயகங்கன் காலம் என்றும், நன்னூலார் பிங்கல நூலைக் குறிக்கின்றார். தொல்காப்பிய எச்சவியல் மூன்றாம் நூற்பாவில் நச்சினார்க்கினியர் நன்னூலாரை மறுக்கின்றார். எனவே பிங்கலத்திற்குப் பின்னும் நச்சினார்க்கினியருக்கு முன்னரும் நன்னூலார் வாழ்ந்து நன்னூல் பாடினார் என்று உ.வே.சா. காலநிர்ணயம் செய்கிறார்.

**நூல்**

**'அரும்பொருள் ஐந்தையும் யாவரும் உணரத்**
**தொகைவகை விரியில் தருக'**

என்ற சீயகங்கன் கேட்டதாக நன்னூல் சிறப்புப் பாயிரம்

கூறுவதால் நன்னூல் ஐந்ததிகாரம் உடையதாகவே ஆதியில் செய்யப்பட்டிருக்கவேண்டும் என்று உவேசா. கருதியுள்ளார்.

இதற்குப் 'பல்வகைத் தாதுவின்' என்னும் சூத்திரத்தின் விசேட உரையில் உள்ள' சொல் எழுத்தாற் பெறப்படுதலின், எழுத்துச் சொற்பொருள் அணியென்னும் நான்கினும் நடப்பது யாப்பென்பதாயிற்று. ஆகவே ஐந்ததிகாரங்களும், தம்முள் ஒன்றையொன்று இன்றியமையாவெனக் கொள்க' என்பதும், 'பழையன கழிதலும்' என்னும் சூத்திரத்தின் கருத்துரையிலுள்ள' இந்நூலிற் சொன்ன ஐந்ததிகாரத்திற்கும் சிங்கநோக்காய் நிற்பதொரு புறநடையுணர்த்துதல் நுதலிற்று' என்பதும் இந்நூல் விருத்தியுரையில் 'இயற்றமிழை அரும்பொருள் ஐந்தெனக் கூறினமையின், இந்நூலுட் கூறிய யாப்பு அணிகள் என்னும் மூன்றதிகாரங்களும் அக்காலத்து உள்ளன போலும்' என எழுதப் பெற்றிருத்தலும் ஆகிய இடங்களை உ.வே.சா. சுட்டிக் காட்டுகிறார்.

'தமிழ் நன்னூற் றுறைகள் அஞ்சுக் கிலக்கியம்' என்ற பெரிய திருமொழித் தனியனையும், அதற்கு உரை எழுதிய பிள்ளை லோகாச்சாரியார் எழுதிய 'தமிழுக்கு எழுத்து முதலான அஞ்சு இலக்கணங்களையும் அறுதியிடுவதான நன்னூல் என்று ஒரு சாஸ்திரம் உண்டு' என்ற உரையையும் உவே.சா. அவர்கள் மேற்கோள் காட்டுகிறார்.[12]

பின்னரும் தொல்காப்பியம் போல யாப்பு, அணி என்னும் இரண்டையும் பொருளில் அடக்கியிருப்பார் ஆகலின் அதிகாரத் தொகையில் வேறுபாடு உண்டேனும் நன்னூல் ஐந்திலக்கணங்களையும் உணர்த்தும் என்பதில் வேறுபாடு இல்லை எனக் கூறியுள்ளார்.

**உரையாசிரியர்**

மயிலைநாதர்தம் உரைத்திறனை உ.வே.சா. நன்கு விளக்கியுள்ளார். தொடக்கத்திலேயே,

> 'இந்நூலின் உரையாசிரியராகிய மயிலைநாதர், தொல்காப்பியம், அவிநயம் முதலிய இலக்கண நூல்களிலும், அவற்றின் உரைகளிலும், அக்காலத்து வழங்கிய அகத்தியச் சூத்திரங்களிலும் எட்டுத்தொகை,

12. நன்னூல் மயிலைநாதர் உரை, ப.6.

பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு முதலிய சங்க நூல்களிலும், ஐம்பெருங்காப்பியம் முதலிய இலக்கியங்களிலும், சைன சமய நூல்களிலும் பிறவற்றிலும் பயிற்சியுள்ளவர்' என்று எழுதியுள்ளார்.'

மயிலைநாதர் என்ற பெயராலும், சைன சமய வழக்குகளையும், அச்சமய நூல் செய்யுட்களையும் ஆங்காங்கு எடுத்துக்காட்டியிருந்தாலும், மயிலாப்பூர்ச் சினாலயத்தில் முன்பு எழுந்தருளிய 22 ஆம் சைன தீர்த்தங்கரராகிய நேமிநாதருக்குரிய மயிலைநாதர் பெயர் இவருக்கு வழங்கப்பட்டதெனக் கூறி இவர் சைனர் என்பார்.[13]

கருங்கழல் வெண்குடைக் கார்நிகர் வண்கைத் திருந்திய செங்கோற் சீயகங்கன்' என்னும் சிறப்புப் பாயிர உரையில் இவர் சீயகங்கனை மிகவும் பாராட்டியிருத்தலையும், 'பல்வகைத் தாதுவின்' என்பதன் உரையில் 'கங்கன் அகல்மார்பன்' என்ற இனிய வெண்பா ஒன்றை மேற்கோளாகக் காட்டியிருத்தலையும், கங்கன் என்னும் பெயரைக் குடிப்பெயருக்கு எடுத்துக்காட்டாகக் காட்டியிருத்தலையும் நோக்கும்போது இவ்வாசிரியர் சீயகங்கன் அல்லது அவன் வழியினரால் ஆதரிக்கப்பட்டு நன்னூலுக்கு உரை எழுதியிருக்கலாம் என்ற கருத்தையும் கூறுகிறார்.

மயிலைநாதர் பழைய செய்யுள் சொற்களையும், பழைய செய்யுட்களின் உரைநடைகளையும் எதுகை மோனைத் தொடர் அமைந்த பகுதிகளையும் ஒன்றன் பரியாயப் பெயர்களையும் (கமலம், சரோருகம், தாமரை, பங்கயம்) எடுத்துக்காட்டும் இடங்களையெல்லாம் உ.வே.சா. அவர்கள் நிரல்படத் தொகுத்துக் கூறியுள்ளார்கள்.

### சீயகங்கன் வரலாறு

நன்னூலை ஆக்குவித்தோனாகிய சீயகங்கன் வரலாற்றையும் விளக்கமாகக் கூறியுள்ளார் உ.வே.சா. அவர்கள் அகநானூற்றிலும், சிலப்பதிகாரத்திலும் கங்கன்-கங்கர் என்ற பெயர் வருவதை எடுத்துக் காட்டியுள்ளார். 'கங்கர் இவர் ஐய கருநாடர் இவர் ஐய' என்ற பிற்கால இலக்கியத்தையும் காட்டுகிறார்.

'துன்னரும் கடுந்திறல் கங்கன்' 'அமராபரணன்' என்ற தொடர்களைக் காட்டி இக்குடியின் வீரத்தைப் பாராட்டுகிறார்.

13. மேலது, ப.19

கி.பி. 1205 ஆம் ஆண்டு வெட்டப்பட்ட கல்வெட்டு ஒன்றில் இவனுக்குத் திருவேகம்பமுடையான் என்ற பெயர் விளங்கியதையும் சான்றுடன் விளக்கியுள்ளார். சீயங்கனின் குவளாயபுரத்தைக் கோலார் என அடையாளம் காட்டுகிறார்.[14]

அரிதின் முயன்று ஏடுகள் தேடிப் பெயர்த்தெழுதி ஒப்பு நோக்கிப் பிரதி வேறுபாடுகளைக் குறிப்பிட்டுப் பொருள் உணர்ச்சியுடைய சிறந்த பாடத்தைத் தேர்ந்தெடுத்து மேற் கோள்கள் பலவற்றை இனம் கண்டு அவற்றைக் குறிப்பிட்ட உ.வே.சா. சுமார் 300க்கு மேற்பட்ட மேற்கோள்களை இடம் விளங்கா மேற்கோள் குறிப்பு அகராதியையும் சேர்த்துள்ளார் எல்லாவற்றையும் அகரவரிசைப்படுத்தியுள்ளார். நூற்பா எண்களையும் குறித்துள்ளார்.

பெரிய ஆய்வு நிறுவனத்தின் பலர் சேர்ந்து ஆற்ற வேண்டிய அரும்பெரும் பணிகளை வசதியில்லா அக்காலத்தில் உ.வே.சா. அவர்கள் ஆற்றியது மிகவும் வியந்து பாராட்டத்தக்க செயலாகும்.

### தமிழ்நெறி விளக்கம்

அகப்பொருள் விளக்கம், இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம் போலத் தமிழ்நெறி விளக்கமும் தமிழ் நெறியை விளக்கிக் கூறுகின்ற ஒரு நூல். அய்யர் அவர்கள் எழுத்து, சொல், பொருள், யாப்பு முதலிய இலக்கணங்களைக் கூறும் நூல் என்பார். ஆனால் இந்நூலில் கிடைத்த 25 நூற்பாக்களும் அகப்பொருள் பற்றிக் கூறுவதால் இது அகப்பொருள் நூல் என்றும் ஆய்வாளர் கூறுவர்.

இந்நூல் இறையனார் களவியலை ஒட்டிச் செல்லுகிறது. இந்நூலையொட்டிக் 'களவியல் காரிகை' என்னும் நூல் செல்லுகிறது. அதனால் இந்நூல் முக்கியம் பெறுகிறது. இருப்பினும் பிற அகப்பொருள் நூல்களுக்கும் தமிழ்நெறி விளக்கத்திற்கும் உள்ள சில வேறுபாடுகளை அய்யர் அவர்கள் குறித்துள்ளார்கள்.

இந்நூலில் களவுக்கு முன் கைக்கிளை கூறப்படவில்லை. களவின் பகுதியாகிய அறத்தொடுநிலை, உடன்போக்கு என்னும் இரண்டும் இந்நூலினுள் கற்பினுள் கூறப்படுகிறது. தலைவனின்

14. மேலது, ப.24.

நற்றாய் கூற்று புதுமையாக அமைக்கப்பட்டுள்ளது. அருகிக் காணப்படும் சில துறைகளுக்கு இலக்கணமும் இலக்கியமும் கூறப்பட்டுள்ளன.

அய்யர் அவர்களுக்கு, பவானி தமிழாசிரியர் குமாரசாமிப்பிள்ளை அவர்கள் மூலம் ஓர் ஏட்டுப் பிரதியே கிடைத்ததால் பாடவேறுபாடுகள் குறிக்கப்பெறவில்லை.[15]

**புறப்பொருள் வெண்பாமாலை**

அய்யர் அவர்கள் பதிப்பித்த நான்கு இலக்கண நூலில் முதலாவதாகப் பதிப்பிக்கப்பட்ட பெருமையை உடையது. 1888 ஆம் ஆண்டு ஆழ்வார் திருநகர் இலட்சுமணக் கவிராயர் வீட்டில் அய்யர் அவர்கட்கு உரையுடன் புறப்பொருள் வெண்பாமாலை ஏட்டுப்பிரதி கிடைத்தது. 1894இல் அய்யர் அவர்கள் புறநானூறு பதிப்பிக்கும்போது திணை, துறை விளக்கங்கள் எழுதப் புறப்பொருள் வெண்பாமாலை மிகவும் பயன்பட்டது.

அய்யர் அவர்கட்கு முன்பே சரவணப் பெருமாளய்யர், தாண்டவராய முதலியார் (1835), இராமசுவாமிகள் (1886) ஆகியோர் புறப்பொருள் வெண்பாமாலை மூலம் மட்டும் பதிப்பித்துள்ளனர். இராமசுவாமிகள் உரையுடன் பதிப்பித்திருந்தாலும், ஏழு ஓலைச்சுவடிகள் துணையுடன் பாடபேதங்கள் குறிக்கப்பட்டு ஐயனாரிதனார் எழுதிய நூலுக்கு மாகறல் சாமுண்டி தேவநாயகரின் பழைய உரையோடு அய்யர் அவர்கள் 1895 இல் முதல் பதிப்பாக வெளியிட்டார்கள்.

பாண்டித்துரைத் தேவரும், திருவாவடுதுறை அம்பலவாண தேசிகரும் இப்பதிப்புக்கு உறுதுணையாக இருந்தார்கள். அய்யர் அவர்கள் காலத்திலேயே இந்நூல் நான்கு பதிப்புக்களாக வெளியிடப்பட்டது.

முதல் பதிப்பைவிட இரண்டு, மூன்று, நான்காம் பதிப்புகளில் புதிய சுவடிகளைக் கொண்டும், தம் பதிப்பு அனுபவத்தைக் கொண்டும் பல்வேறு திருத்தங்களையும், சேர்க்கைகளையும் அய்யர் அவர்கள் செய்துள்ளார்கள்.[16]

15. டாக்டர் உ.வே.சா., இலக்கணப் பதிப்புகள், பக்94-96.

16. மேலது, ப.26.

## நன்னூல் சங்கரநமச்சிவாயர் உரைப் பதிப்பு

### சங்கரநமச்சிவாயர் உரை

பதினான்காம் நூற்றாண்டில் தோன்றிய மயிலைநாதன் உரை, 16 ஆம் நூற்றாண்டில் தோன்றிய ஆண்டிப் புலவர் உரை முதலிய பல உரைகள் நன்னூலுக்குத் தோன்றிய பின் 17ஆம் நூற்றாண்டில் சங்கரநமச்சிவாயர் உரை தோன்றியது. இவ்வுரை பல வழிகளிலும் சிறப்புடையதாகும்.

ஆசிரியர் சாமிநாத் தேசிகரின் வேண்டுகோள்படியும், ஊற்றுமலை ஐமீன்தார் மருதப்பத் தேவரின் வேண்டுகோள் படியும் சங்கரநமச்சிவாயர் நன்னூலுக்கு உரை எழுதினார். சங்கரநமச்சிவாயர் உரை பலவழிகளில் மயிலைநாதர் உரையைப் பின்பற்றினாலும், மயிலைநாதரால் புலப்படுத்தாத எண்ணற்ற செய்திகள் இவர் உரையில் காணப்படுகின்றன. பதாச்சாரம், ஆதாரம் காட்டல், உவமை காட்டல் முதலியவற்றில் சங்கரநமச்சிவாயர் உரை சிறந்து விளங்குகிறது. தொல்காப்பியச் சேனாவரையர் உரையோடு இவர் உரையை ஒப்பிடுவர்.

அய்யரவர்கள் சங்கரநமச்சிவாயர் உரைச் சிறப்பைப் பின்வருமாறு கூறுகிறார்.

> 'வடநூல் கடலையும் தென்தமிழ்க் கடலையும் நிலைகண்டுணர்ந்த சிவஞான யோகிகள் இருமொழிக் கண்ணும் தாம் ஆராய்ந்தறிந்த அரிய விதிகளை அமைத்தற்குத்தக்க இடம் என்று கொள்வாராயின் சங்கரநமச்சிவாயருடைய உரையின் பெருமையைக் கூறவல்லவன் யானோ!'

என்பது அய்யரவர்கள் கூற்றாகும்.[17]

### சங்கரநமசிவாயர் உரைப்பதிப்புக்கள்

விசாகப் பெருமாளய்யர் 1839 இல் வெளியிட்ட நன்னூல் காண்டிகை உரையில் 'சங்கரநமச்சிவாயரால் செய்யப் பெற்ற நன்னூல் விருத்தி உரையையும், சிவஞான முனிவரால் திருத்தம் செய்யப்பெற்ற புத்தம் புத்துரையையும் சுருக்கி, சிறுவரும் புரிந்து கொள்ளும்படியாகக் கருத்து, பதப்பொருள், எடுத்துக்காட்டு முதலானவற்றையும் கொண்டு செய்யப்பட்டது' என்று கூறுகிறார்.

17. நன்னூல் சங்கரநமச்சிவாயர் உரை (1925), ப.22.

# 5. சிற்றிலக்கியங்கள்

அய்யர் அவர்கள் இளமைக் காலத்தில் சிற்றிலக் கியங்களையே அதிகமாகப் பாடம் கேட்டார். அவற்றையே அதிகமாகப் பாடமும் சொன்னார். அவர் பதிப்புகளில் சிற்றிலக்கியங்களே அளவில் விஞ்சி நிற்கிறது.

தமிழின் உள்ளுறையை ஒருவன் தெரிந்து கொள்ள வேண்டும் என்றால் சிற்றிலக்கியங்களையே படிக்க வேண்டும் என்பார் அய்யர். யாரேனும் பாடம் கேட்க வந்தால் முதலில் பிரபந்தங்களைப் பாடம் கேள் என்பார். சிற்றிலக்கியங்கள்தாம் தமிழ்மொழியை அரண்கோலிக் காத்துவந்தது என்பது அய்யர் கொள்கை.[1]

தமிழ்விடு தூதில் தமிழாகிய அரசிற்குச் சிற்றிலக்கியங்களே மெய்க்காப்பாளர்கள் என அந்நூலின் ஆசிரியர் கூறுகிறார். இது அய்யர் அவர்களின் உள்ளக்கிடக்கைக்கு உகந்ததாக இருப்பது கண்டு அந்நூலின் முகவுரையில் அக்கருத்தைப் பாராட்டி எழுதியுள்ளார்.

திருவாவடுதுறைக் கோவைக்கு உரை எழுதிய அய்யர் அவர்கள் ஏறக்குறைய அறுபது நூல்களை மேற்கோள் காட்டியுள்ளார். ஒரு சிற்றிலக்கியத்திற்கு ஏற்ற இடங்களில் இவ்வளவு நூல்களின் கருத்தைச் சிந்தையில் தேக்கிவைத்து மேற்கோள் காட்டியது வியப்புக்குரிய செயலாகும்.

பல சிற்றிலக்கியங்களுக்கு உரையெழுதிப் பதிப் பித்துள்ளார். பலவற்றை மறுபதிப்பும் செய்துள்ளார். மறுபதிப்பில் ஏற்ற பல மாற்றங்களைச் செய்துள்ளார். திருப்பூவனநாதர் உலாவைப் பதிப்பிக்கும்போது 'இந்நூலில் அடிமடக்குகளிலும், சிலேடைகளிலும், பேதமில்லாமல்

---

1. உவே.சா., ஒரு தமிழ்வாழ்வு, ப.40

நகர னகரங்களும், எதுகைகளில் பன்மை வரவேண்டிய இடத்தில் ஒருமையும், ஒருமை வரவேண்டிய இடத்தில் பன்மையும் சில இடங்களில் வந்திருக்கின்றன. மாற்றக் கூடாமையால் அவை உள்ளவாறே பதிப்பிக்கப்பட்டன' என்று அய்யர் எழுதியுள்ளார். இதுவே அய்யர் அவர்களின் பதிப்புக் கொள்கையாகும்.

1900ஆம் ஆண்டில் அய்யருக்குத் 'தமிழ்விடுதூது' ஏடு கிடைத்தது. ஆனால் 1930ஆம் ஆண்டுதான் அந்நூலைப் பதிப்பித்தார். ஏறக்குறைய முப்பது ஆண்டுகளில் பன்முறை ஆய்ந்து அந்நூலைச் செம்மைப் படுத்தினார்.

சிற்றிலக்கியங்கள் பதிப்பிக்கும்போது அந்தச் சிற்றிலக்கியத்திற்குரிய இலக்கணத்தைச் சான்றுடன் எடுத்துக் காட்டி அவ்வகை இலக்கியங்களின் பட்டியலையும் தருவார்.

தூது, கோவை, புராணம், பரணி, அந்தாதி, மாலை, வெண்பா, குறவஞ்சி, பஞ்சரத்தினம், பிள்ளைத்தமிழ், திருவிருத்தம், கலம்பகம் ஆகிய வகைகளில் பல சிற்றிலக்கியங்களைப் பதிப்பித்துள்ள அய்யர் அவர்கள் மூவரின் பிரபந்தத் திரட்டுக்களையும் வெளியிட்டுள்ளார்.

அய்யர் அவர்களின் முன்னுரையையும், ஆய்வுக் குறிப்புக்களையும் படித்துவிட்டால் அந்த நூலைப் படிப்பது ஒருவருக்கு மிக எளிதாகிவிடும். சிற்றிலக்கியச் செல்வங்களைப் பதிப்பித்த எண்ணிக்கையில் அய்யர் அவர்களே முதலிடம் பெறுகிறார்கள்.

வரலாற்றுச் சிறப்புமிக்க 'மூவர் உலா' அய்யர் பதிப்பாயினும் அவர் மறைவிற்குப் பின்னரே வெளிவந்தது (1946).

அதேபோல அவர் பதிப்பிக்க இருந்த 'திருக்கழுக்குன்றக் கோவை' அவர் மறைவிற்குப் பின்னரே வெளிவந்தது (1943).

## மூவருலாப் பதிப்பு

### உலா

தமிழ் இலக்கியச் செல்வங்களுள் 96 வகைப் பிரபந்தங்களில் 'உலா' தோன்றுவதற்குத் தொல்காப்பியம் இடம் தருகிறது. 'விருந்து' என்று அவர் கூறுவதனுள் இதனை அடக்கலாம். இவ்வுலா பவனி, பவனி உலா, உலாப்புறம், உலாமாலை, உலாச்செய்யுள் எனவும் அழைக்கப்பெறும்.

சங்கரநமச்சிவாயர் 'புறஉலா' என்பதே 'உலாப்புறம்' ஆயிற்று என்பர்.

முத்தொள்ளாயிரம், பெருங்கதை, சிந்தாமணி, கம்பராமாயணம் முதலிய நூல்களிலும், தேவாரத் திருமுறைகளிலும் தலைவர்கள் உலாச் செல்வது கூறப்பட்டுள்ளது. சேரமான் பெருமாள் நாயனார் இயற்றிய திருக்கைலாய ஞான உலாவே முதல் உலா நூல் ஆகும். ஆகையால் இதனை ஆதியுலா என்பர்.

உலா கலிவெண்பாவில் பாடப்படும். ஓரெதுகை அமைந்த ஈரடிகளைக் 'கண்ணி' என்பர்.

**'முன்நா யகரிலவன் மூதுலாக் கண்ணிதொறும்**
**பொன்னா யிரம்சொரிந்த பூபதியும்'**

என்பது சங்கரசோழன் உலா வரிகளாகும். 'நெடும்பாட்டு' 'தொடர்நிலைச் செய்யுள்' என அழைக்கப்படும் உலா நூலைச் 'சிறு காப்பியம்' என்றே சிலர் சிறப்பிப்பர். உலாவிற்குக் கண்ணி வரையறை இல்லை. இன்று கிடைக்கும் உலாக்களில் 196 முதல் 1008 கண்ணிகள் வரை சிற்றெல்லை பேரெல்லையாகக் காணப்படுகிறது.

பாடாண்திணைக்குரிய உலா பெண்பாற் கைக்கிளையாகப் பாடப்படும். ஒருதலைக் காமமே இங்கு நிகழ்கிறது. தலைவன் மகளிர் மேல் உலாவின்போது அன்பு காட்டுவது எங்குமில்லை. பெண்கள் நிலைக்கு இரங்கிப் புன்முறுவல் பூப்பது கூறப்படுகிறது. பெண்கள் உலாச் செல்லுவதாகப் பாடப்படுவதில்லை. உலாச் செல்லும் ஆடவர்களைப் பாலன், மீளி, மறவோன், திறவோன், காளை, விடலை, முதுமகன் என ஏழு பருவம் உடையவர்களாகப் பிரிப்பர். இவர்கள் வயது உயர் வரம்பு 7,10,14,15,16,30,48 ஆகும். 48 வயதுக்கு மேல் உலாச் செல்லும் மரபு இல்லை.

ஒரே நாளில் உலாச் செல்லுவதாகக் கூறலே மரபு. மதுரைச் சொக்கநாதர் உலாவில் இறைவன் 7 நாட்கள் உலாச் செல்லுவதாகவும், 7 நாட்களில் 7 பருவ மாதர்கள் கண்டு காமுறுவதாகவும் கூறப்படுகிறது.

### மூவருலா

பிற்காலச் சோழர்களில் விக்கிரம சோழன் (118-1135), இரண்டாம் குலோத்துங்க சோழன் (1133-1150), இரண்டாம் இராச

ராச சோழன் (1146-1178) ஆகிய மூவர் மீதும் சோழ மன்னர்களின் ஆசானும், அவைக்களப் புலவருமாகிய கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் பாடியவையே இம்மூவருலா ஆகும்.

பெரும்பாலும் இவை தனித்தனி நூல்களாகவே வழங்கிவந்தன. மூவருலா என்று சேர்த்துக் குறிக்கப்பட்டாலும் இன்னும் விக்கிரமசோழன் உலா, குலோத்துங்கசோழன் உலா, இர்ாசராசன் உலா எனத் தனித்தனிப் பதிப்புகளும் உள்ளன. இவற்றைப் பாடியதால் 'கோவை உலா அந்தாதிக்கு ஒட்டக்கூத்தன்' என்ற சிறப்புப்பெயர் ஆசிரியருக்கு வழங்கப்பெற்றது.

சிலப்பதிகாரமும் மணிமேகலையும் இரட்டைக் காப்பியங்கள் என வழங்கப்பட்டன. இம்மூன்று நூல்களும் ஒரே புலவர் ஒரே மரபில் அடுத்தடுத்து ஆட்சி புரிந்த மூவர்மீது பாடப்பட்ட காரணத்தால் 'மூவருலா' என அழைக்கப்பட்டது. அய்யர் அவர்களே தாம் வெளியிட்ட பிற உலா முன்னுரைகளில் 'மூவருலா' என்ற பெயரைக் குறித்துள்ளார்.

சங்கரசோழன் உலாவில்,

> **'கூத்தன் நிகழ்த்த ஒரு மூன்று உலாக்கொண்டான்**
> **போந்தான் உலா' (389)**

என்று கூறப்படுகிறது.

> **'தேவ ருலாவுடனே சேரும் திருவானைக்**
> **காவ லுலாப் புலியூர்க் கச்சியுலா- மூவருலா**
> **மல்லைச் சிவந்தான் வழுதியுலா என்றெவரும்**
> **சொல்லப் பகர்ந்தேன் துணிந்து'**

எனவரும் சிவந்தெழுந்த பல்லவராயன் உலாக் காப்பு வெண்பாவால் 17ஆம் நூற்றாண்டிலேயே 'மூவருலா' என்ற வழக்கு உள்ளதை அறியலாம்.

## மூவருலாப் பதிப்பு

மு. இராகவையங்கார் 1880ஆம் ஆண்டு விக்கிரம சோழன் உலாவையும், எஸ். வையாபுரிப்பிள்ளை 1922ஆம் ஆண்டு இராசராசன் உலாவையும் பதிப்பித்தனர். செந்தமிழில் குலோத்துங்கசோழன் உலா வெளி வந்தது. 1925ஆம் ஆண்டு பண்டித அ. கோபாலையர் மூன்றையும் சேர்த்து மூவருலா மூலத்தைப் பதிப்பித்தார்.

18.4.1942 ஆம் ஆண்டு அய்யர் அவர்கள் மறைவிற்குப் பின்னர் 1946 சூலையில் மூவருலா உ.வே.சா. நூல்நிலைய வெளியீடாக முதல் முறையாக வெளியிடப்பட்டது. அய்யர் அவர்கள் மகன் எஸ்.கலியாணசுந்தரையர் அதன் பதிப்பாசிரியர். இந்தப் பதிப்பின் பதிப்பகம் கலாக்ஷேத்ரம், அடையாறு ஆகும். வி.மு. சுப்பிரமணிய அய்யரும், ச.கு. கணபதி அய்யரும் பதிப்புப்பணியில் உதவியுள்ளனர். திருவாங்கூர் சமஸ்தானம் பொருள் உதவி செய்துள்ளது. 1952இல் தனியாகப் பதிப்பிக்கப்பட்ட விக்கிரமசோழன் உலா கலாக்ஷேத்ரம் ஸ்ரீமதி ருக்மணி தேவி பெயரிலேயே பதிப்பிக்கப்பட்டுள்ளது. (அய்யர் பெயரோ அவர் மகன் பெயரோ நூலில் எங்குமில்லை). 1959இல் மர்ரே கம்பெனி எஸ்.ராஜம் அவர்கள் குலோத்துங்கசோழன் உலாவை அழகிய சிறு பதிப்பாக வெளியிட்டார்கள்.

அய்யர் அவர்கள் நூலக ஓலைச்சுவடிப் பட்டியலில் மூவருலா ஏட்டுச் சுவடிகள் குறிக்கப்படவில்லை. மூவருலாப் பதிப்பில் 'கையெழுத்துப் பிரதிகளின் விபரம்' என்றே மூலச் சுவடிகள் குறிக்கப்பட்டுள்ளன.

உ.வே.சா. நூலகப் பட்டியலிலோ, சில ஆய்வாளர்கள் தொகுத்துக் கூறும் உவே.சா நூல் பட்டியலிலோ மூவருலா அய்யர் பதிப்பாகக் குறிக்கப்படுவதில்லை. ஆனால் 1946ஆம் ஆண்டு வெளியிட்ட மூவருலாப் பதிப்பில் எஸ். கல்யாணசுந்தரையர் எழுதிய குறிப்பிலிருந்து மூவருலாப் பதிப்புப் பணியை அச்சுக்கேற்றவாறு தயாரித்தவர் அய்யரே என்பது புலப்படுகிறது.

> 'என் தந்தையார் அவர்கள் கும்பகோணத்தில் இருந்த காலம் தொடங்கியே இம் மூவருலாவைப் பதிப்பிக்க எண்ணிப் பல பிரதிகளையும், அவற்றுக்கு இன்றியமையாத இலக்கியம், சரித்திரம் சம்பந்தமான பல வகைக் குறிப்புக்களையும் ஆராய்ச்சி செய்து தொகுத்து வைத்திருந்தார்கள். அக்குறிப்புக்களும் பிரதிகளை ஒப்புநோக்கிக் குறித்து வைத்திருந்த பாடபேதங்களும் இப்பதிப்பு இவ்வளவு திருத்தமாக வெளிவருவதற்கு முக்கிய ஆதாரமாக இருந்தன. பலவகையான வேலைகளால் இப்பதிப்பை அவர்களே வெளியிட இயலாமல் போயிற்று'

என்பது எஸ். கலியாணசுந்தரையர் குறிப்பாகும். அய்யர் மறைவிற்குப் பின் வந்தாலும் இதுவும் அய்யர் அவர்கள் பதிப்பாகவே கருதப்படுகிறது.

**அய்யரவர்கள் பதிப்பித்த உலாக்கள்**

அய்யர் அவர்கள் இளமையில் பாடம்கேட்ட நூல்களில், உலா நூல்கள் சில இடம்பெற்றுள்ளன எனக்கருதலாம். முன்சிப் சேலம் இராமசாமி முதலியாரிடம் தாம் படித்த நூல்களை அய்யர் நிரலாகக் கூறுகிறார். அவர் கூறிய நூல்பட்டியலில் இருபது உலா நூல்கள் இருந்தன. 1891ஆம் ஆண்டு வாக்கிலேயே மூவருலாப்பிரதியைப் பெற்ற அய்யர் பின்னர்ப் பல உலா நூல்களைச் சிறப்பாகப் பதிப்பித்தார். அவை:

திருப்பூவனநாதர் உலா (1904), காளத்திநாதர் உலா (1904), திருவாரூர் உலா (1905), திருவிடைமருதூர் உலா (1910), மதுரைச் சொக்கநாதர் உலா (1931), கடம்பர்கோயில் உலா (1932), தஞ்சைப் பெருவுடையார் உலா (1932), சங்கரலிங்க உலா (1933), இலஞ்சி முருகன் உலா (1935) திருக்கழுக் குன்றத்து உலா (1938) என்பவனவாகும். 49ஆம் வயதில் ‘முதல் உலாவையும் 83ஆம் வயதில் கடைசி உலாவையும் அய்யர் பதிப்பித்துள்ளார்.

**உள்ளத்தை வருத்திய ஒரு வினா**

ஒப்பாரும் மிக்காரும் இல்லாத தனிப்பெரும் தலைவன் உலாப் போகின்றான். அவன் ஏற்கனவே கன்னியரைக் கைப்பற்றிக் கடிமணம் புரிந்தவன். அவனைத் தெருவில் கண்ட பெண்கள் காமுறவதாகக் கூறுவது சரியா? அதனால் தமிழ்ப் பண்பாடு குறையாதா? இந்த வினா அய்யர் உள்ளத்தைப் பலகாலும் துன்புறுத்தியிருக்க வேண்டும்.

அய்யர் அவர்கள் காப்பியங்களிலிருந்தும், இலக்கிய இலக்கண உரைகளிலிருந்தும் தக்க மேற்கோள்கள் காட்டித் தமிழ்ப் பண்பாடு குலையவில்லை என்பதை நிறுவுகிறார்.

தொல்காப்பியர் புறத்திணை இயலில் உள்ள, ‘ஊரொடு தோற்றமும் உரித்தென மொழிப’ என்னும் நூற்பாப் பகுதிக்கு உரை எழுத வந்த நச்சினார்க்கினியார்,

> **‘பக்கு நின்ற காமம் ஊரில் பொதுமகளிரோடு**
> **கூறவந்த**
> **விளக்கமும் பாடாண் திணைக்கு உரித்தென்று**
> **கூறுவர்**
> **ஆசிரியர். அது பின்னுள்ளோர் ஏழு பருவமாகப்**
> **பிரித்துக் கலிவெண்பாவில் செய்யும் உலாச்**
> **செய்யுளாம்’**

என எழுதி,

> 'இனி ஊரொடு தோற்றம் பரத்தையர்க்கே அன்றிக்
> குலமகளிர்க்குக் கூறப்படாது'

என்றும் உரை எழுதியுள்ளார்

பெருங்கதையில் உதயணன் உலாப் போந்தபோது,

> **'உத்தம மகளிர் ஒழிய மற்றைக்**
> **கன்னியர் எல்லாம்'** (2:7:54–55)

காமுற்றனர் என்ற நிலையைக் காணுகிறோம்.

சீவகசிந்தாமணியில் சீவகன் உலா வருவதைக் கண்ட கற்புடை மகளிர் ஆசி கூறிய நிலையையும், கற்புடை மாதரை ஒழிந்தோர் ஆண்டு மயங்கிக் காமுற்ற நிலையையும் காணுகிறோம் (456-457). பெண்கள்,

> **'மின்னிவர் நுசுப்புநோவ விடலையைக் காணஓடி**
> **அன்னமும் மயிலும் போல்வார்'**

என்ற சிந்தாமணிப் பாடல் பகுதிக்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர் 'இது கற்புடை மகளிர் ஒழிந்தாரைக் கூறிற்று' என்பார்.

இதனையெல்லாம் மேற்கோள் காட்டி அய்யர் அவர்கள் தாம் பதிப்பித்த உலாக்களில் எல்லாம் தவறாது 'தலைமகன் உலாப் போந்த வீதியென்றது உருத்திர கணிகையரது தெருக்களை' என்று எழுதியுள்ளார். மீண்டும் ஓரிடத்தில் 'கற்புடை மகளிர் பிறரைக் கண்டு காமுறுதல் அறம் அன்று; ஆதலின் இவ்வரையறை அமைந்ததென்று தோன்றுகிறது' என அய்யர் அவர்கள் விளக்கமாக எழுதியுள்ளார்கள். காமுறுவோர் தளிப் பெண்டுகள், பொது மகளிர், பரத்தையர் எனவும் அய்யர் குறித்துள்ளார்.

### அய்யருக்கு மறுப்பு

சி. இராமாநுஜ அய்யங்கார் அவர்கள் தாம் வெளியிட்ட சிறு புலியூர் உலாவில் அய்யர் கருத்தை மறுத்து எழுதியுள்ளார் (1951). 'தலைவன் உலாவைக் காணும் மகளிரைப் பரத்தையர் அல்லது உருத்திர கணிகையர் எனச் சிலர் கூறுவர்' என அய்யர் பெயரைச் சுட்டாமல் அம் மறுப்புரை உள்ளது.

தலைவன் உலாவரும் வீதியைப் பரத்தையர் வீதி, பரத்தையர் சேரி, உருத்திர கணிகையர் வீதி என்று எந்த உலாவிலும் கூறப்படவில்லை. மாறாகத் 'தொன்னகர் எதிர்க்கொள நன்னெடு வீதி'யில் உலா வந்ததாகவே எங்கும் காணுகிறோம்.

உயர்குடிப் பிறப்பும் நல்லொழுக்கமும் அறிவும் திருவும் அழகும் கல்வி கேள்விகளும் கொடையும் ஆண்மையும் முதலிய நலன்கள் அனைத்தும் நிறைந்தோங்கிய ஒப்பாரும், மிக்காரும் இல்லாத தலைவன் பரத்தையர் சேரியில் உலாப்போதல் ஒவ்வாது.

'அன்பின் விழையார் பொருள் விழையும்' ஆய்தொடியினராகிய பரத்தையர் தெருவில் உலாவரும் தலைவனைக் காதலியார், உலாப் போகும் தலைவனைக் காதலிப்பதால் அவர் பெறுவது என்ன? உருத்திர கணிகையால் காதலிக்கப்பட்டான் என்பது தலைமகன் நிலைக்குப் பொருந்துவதன்று. எனவே உலாக்களில் கூறும் மகளிர் எல்லா மகளிரையும் குறிக்கும்.

இது மகளிர் கற்புக்குப் பழுதாகுமோ எனில் ஆகாது. ஏனெனில் உலாக் கூற்று நிகழ்ந்தவற்றை நிகழ்ந்தபடி கூறுவது உண்மையுரையாகாது. அது உலாப்பாடிய புலவரின் புனைந்துரையாகும். இதனால் உலாவின் தலைவன் மகளிர் அனைவரும் கண்டு காதல் கொள்ளத்தகும் கட்டழகன் என்பதே கருத்தாகும்.

இன்னும் சிலர் தலைவன் திருமால் அம்சம் ஆதலின் பரமாத்மாவை அபிலாஷை, சிந்தனை, அனுஸ்மிருதி, இச்சை, ருசி, பரபக்தி, பரமபக்தி என்ற ஏழு சீவான்மாக்கள் வணங்குவதே ஏழு பருவப் பெண்களின் நிலையாகும் என்பர்.

இன்னும் சிலர் தலைவன் இறைவனுக்குச் சமம். உலகில் இறைவன் ஒருவனே புருஷன். மற்ற எல்லோரும் பெண்கள். எனவே நாயகன்-நாயகி பாவத்தைக் காட்டுவதே உலாவின் நோக்கம் என்றும் கூறுவர்.

### வரலாற்று ஆதாரங்கள் காட்டல்

மூவருலா சோழர் பரம்பரை வரலாறு கூறும் இன்றியமையாத நூலாகும். தமிழ்விடுதூது எவ்வாறு இலக்கிய

வரலாற்றுச் சுருக்கமோ அதுபோலச் சோழர் வரலாற்றுச் சுருக்கமே மூவருலா ஆகும்.

இதற்குக் குறிப்புரை எழுத அய்யரவர்கள் வரலாற்றுப் பேரறிஞர் கே.ஏ. நீலகண்ட சாஸ்திரியாரின் 'சோழர்கள்' (1933,37) மு. இராகவையங்காரின் 'சாசனத் தமிழ்க்கவி சரிதம், (1937) பெருந் தொகையில் உள்ள கல்வெட்டுப் பாடல்கள் (1935-1936), மைய அரசு தொல்பொருள் அளவீட்டுத் துறையின் கல்வெட்டுத் தொகுதிகள், ஆண்டறிக்கைகள், செந்தமிழ் போன்ற இதழ்களில் அ.கோபிநாதராவ் போன்றோர் வெளியிட்ட கல்வெட்டுக்கள், சோழர் மெய்க்கீர்த்திகள், செப்பேடுகள், சோழராஜ்ய சரித்திரம் போன்ற ஆவணம் கையெழுத்துப் படிகள் போன்றவற்றை நன்கு படித்துள்ளார்.

சீவக சிந்தாமணிப் பதிப்பின் போது சமணரிடம் சென்று சமண சமய நுட்பங்களை அறிந்த அய்யர் மூவருலாப் பதிப்பின்போது வரலாற்று நூல்களைப் படித்ததில் வியப்பில்லை.

கல்வெட்டு மேற்கோள்கள்

'பொற்கொடியார்–வீதி புகுந்து விளையாடும் எல்லைக்கண்
ஆதி யுகம்வந்து அடிக்கொள்ள' (1:119–120)

என்பது மூவருலா அடிகள் ஆதியுகம் -முதல் யுகம்; கிரேதா யுகம். அப்போது மக்கள் எல்லா வளமும் குறைவறப்பெற்று வறுமை, நோய், துன்பம், பகை, அச்சம் இன்றி வாழ்வாங்கு வாழ்ந்து மகிழ்ச்சியில் திளைத்தனர். பாரதியார்கூடக் கிரதயுகம் எழுக மாதோ' என்று பாடினார். இவ்விடத்தில்,.

'வேதமும் மெய்ம்மையும் ஆதியுகம்போலத் தலைசிறப்ப வந்தருளி'
ஆதியுகம் கொழுந்துவிட்டுத் தழைத்தோங்க'

என்னும் விக்கிரம சோழன், இரண்டாம் இராசராசன் மெய்க் கீர்த்திப் பகுதிகளை அய்யர் மேற்கோள் காட்டியுள்ளார்.

'மேவலர்தம் சேலைத் துறந்து சிலையைத் தடிந்திருகால்
சாலை கலமறுத்த தண்டினான்'

என்ற மூவருலா அடிகட்கு 'மீனவர் சிலைகெட வில்லவர் குலைதர' என்னும் சோழர் மெய்க்கீர்த்திப் பகுதியை எடுத்துக்காட்டாகக் காட்டுவார் அய்யர்.

'பொன்னின் கரைகண்ட பூபதி' என்னும் கரிகாலன் பற்றிய தொடருக்குத் திருச்செந்துறைக் கல்வெட்டில் காணும் 'கரிகாலக்கரை' என்ற தொடரை அய்யர் அவர்கள் மேற்கோள் காட்டுவது சிறப்பாக உள்ளது.

முதல் இராசராசன் பெயர் அருமொழிவர்மன் என்பதே. அருண் மொழிவர்மன் அல்ல: இதை உணர்ந்த அய்யர் அவர்கள் 'அருமொழிவர்மன்' என்றே எழுதியுள்ளார்கள்.

**உரைக்கு விளக்கம்**

குலோத்துங்கசோழன் உலாவிற்கு மட்டும் பழைய உரை ஒன்றுள்ளது. அவ்வுரைக்கும் அய்யர் அவர்கள் குறிப்புரை எழுதியுள்ளார்கள். பல இடங்களில் பழைய உரையில் காணாத பல நயங்களைக் காட்டுகிறார்.

> **'விற்கொடியும் மீனக் கொடியும் கொடுவரிப்**
> **பொற்கொடி ஒன்றின் புடைபோத'** (2:87)

என்ற கண்ணிக்கு 'விற்கொடியும் மீனக்கொடியும் தனது கொடியாகிய புலிக் கொடியுடன் நிலைபெற' என்றே பழைய உரைகாரர் எழுதியுள்ளார்.

இதற்குக் குறிப்புரை எழுதிய அய்யரவர்கள்,

> **'புடை–பக்கத்தே; என்றதனால் புலிக்கொடியின்**
> **உயர்வு கூறப்பட்டது'**

என்று கூறியிருப்பது சிறப்பாக உள்ளது.

மனுவை-'மறவோன்' என்று மூவருலாக் கூறுகிறது. 'நியாய வீரன்' என்று அய்யர் எழுதியிருப்பது காணலாம்.

**சொல்லடைவு**

சொல்லடைவு என்பது மக்களுக்கு உயிரும் கண்ணும் போன்றது; மாளிகைக்கு வாயில் போன்றது. விரிவும் விளக்கமும் கொண்ட சொல்லடைவு தருவது அய்யரின் வழக்கம். மூவருலாவிற்கு அவர் அளித்துள்ள சொல்லடைவு பல வழிகளில் சிறந்து விளங்குகிறது.

| | | |
|---|---|---|
| பொருள் கூறல் | : | ஓரே - மகளிர் விளையாட்டு, சலாபம் - முத்துக் குளிக்கும் இடம். |
| சிறப்புப்பொருள் கூறல்: | | கவர்தல் - விரும்புதல்; கன்னி - கன்னியாகுமரி. |
| சொல்திரிபு காட்டல் | : | மாகதன் - மகதமன்னன்; காகாளம் - காகளம். |
| பண்டைய வழக்கம் காட்டல் | : | சந்தனத்தைப் பனிநீரில் குழைத்துப் பூசுதல், எண்ணத்தை நிறைவேற்றக் கடலாடல். |
| பொருளின் சிறப்பைக் கூறல் | : | கடல் - மன்மதன் முரசு; யாழ் - இராவணன் கொடி. |

உவமைகள் தருதல் : கழுத்துக்குச் சங்கு, கூந்தலுக்குக் காடு. இவ்வாறு சிறப்புமிக்க பதிப்பு முறைகளே ஜூலியன், வின்சோன்போப் போன்ற மேனாட்டறிஞர்கள் அய்யரைப் பலபடப் புகழ்வதற்குக் காரணமாகும்.

## வழக்கை எடுத்துக் காட்டுதல்

> 'பழக்கத்தால்–போந்த புலியுடனே புல்வாய்
> ஒருதுறைநீர்
> மாந்த உலகாண்ட மன்னர் பிரான்'– மாந்தாதா

என்பது மூவருலா. இதற்குப் பல்வேறு இலக்கியச் சான்றுகள் மிகுதியாகக் கூறி அய்யர் அவர்கள்,

> 'ஏதேனும் ஒரு நிகழ்ச்சியைக் சிறப்பித்துக் கூற விரும்பும்போது மக்கள் மனு, மாந்தாதா காலங்களில் இது இப்படி நடந்தது என்று சிறப்பித்துக் கூறுவது வழக்கு'

என மக்கள் வழக்கத்தையும் மேற்கோள் கூறியுள்ளார்.

## இன்றைய சிக்கல்களுக்கு மூவருலாக் காட்டும் வழி

இரண்டாம் குலோத்துங்கன் தன்குல நாயகன் தாண்டவம் பயிலும் தில்லையம்பலம் சென்றான். தில்லைக் கூத்தனுக்கு இடம்

வேண்டும் என்பதற்காகத் திருமுன்றில் இருந்த கோவிந்தராசப் பெருமானை எடுத்துக் கடலுள் எறிந்தான். இதனை,

> **'போத்தின்மேல்–தில்லைத் திருமுன்ற மன்றில்**
> **சிறுதெய்வத்**
> **தொல்லைக் குறும்பு தொலைத்தெடுத்து'** *(2:38-39)*

என்று உலா கூறுகிறது. தக்கயாகப் பரணியும்

> **'முன்றில் கிடந்த தடங்கடல் போய்**
> **முன்னைக் கடல்புக'** *(777)*

என்று கூறுகிறது. இராமானுஜ திவ்ய சரிதையில் இந்நிகழ்ச்சி

> **'அம்பொன் கொடைச்சகரம் ஆயிரத்தின்**
> **மேல்நாற்பத்**
> **தொன்பதாம் வருஷத்து உயர்நிலைத்–தென்பாலில்**
> **சென்னி குலோத்துங்கன் சித்திரகூ டத்திருமால்**
> **தன்னை அலையெறிநாள் தான்'**

என்று குறிப்பிடப்படுகிறது.

தந்தை திருமால் கோயிலை அகற்றிக் கடலில் எறிந்தான். நாட்டில் கலகம் நடந்தது. மகன் இரண்டாம் இராசராசன் மீண்டும் திருமாலைத் தில்லையில் பிரதிட்டை செய்தான். கலகம் அடங்கியது. 'விழுந்த அரிசமயம் மீள எடுத்தான்' என்று புலவர் அவனைப் பாராட்டுவர்.

காவிரியாற்றில் நீர் வராமல் பிறர் தடுத்ததாகவும் சோழர்கள் காவிரியை மீண்டும் சோழநாட்டுக்குக் கொண்டு வந்ததாகவும் மூவருலாவிலும் குறிப்புக்கள் காணப்படுகின்றன.

> **'சுழியிட்ட காவிரிக்குச் சோணாடு வாழ**
> **வழிவிட்ட வாள்காண வாரீர்'**

என்பது உலா வரியாகும். 'மலைகொன்று பொன்னிக்கு வழிகண்ட கண்டன்' 'சையமலைச் சிறைதீர் வாட்கண்டன்' என்று பிற இலக்கியங்களும் இதனைக் கூறுகின்றன. காவிரியின் தமிழக உரிமையை உலா நிலைநாட்டுகிறது.

# 6. உரைநடை நூல்கள்

பழந்தமிழ் நூல்களை ஏட்டுச் சுவடிகளிலிருந்து தேடிப் படியெடுத்து ஒப்புநோக்கிச் சிறந்த முறையில் அவற்றை நூல்களாக வெளியிட்டுத் தமிழ்த் தாய்க்கு அணிகலன்களாகப் பூட்டி மகிழ்ந்த அய்யர் அவர்கள் பல உரைநடை நூல்களையும் எழுதி வெளியிட்டுள்ளார்கள்.

**என் சரித்திரம்**

அய்யரவர்கள் தம்முடைய ஆசிரியராகிய மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களின் சரித்திரத்தை வெளியிட வேண்டும் என்னும் நெடுநாள் ஆர்வத்தால் அவர்கள் பல செய்திகளைத் தொகுத்து வைத்திருந்தார்கள். அவற்றைக் கொண்டு மிக விரிவாக அச்சரித்திரத்தை இரண்டு பாகங்களாக எழுதி முடித்து முதல் பாகத்தை 1933 ஆம் ஆண்டும், இரண்டாம் பாகத்தை 1934 ஆம் ஆண்டும் வெளியிட்டார்கள். அதைப் படித்துத் தமிழ் உலகம் மகிழ்ந்தது.

அய்யர் அவர்களின் 80 ஆம் ஆண்டு நிறைவு விழா சதாபிடேக விழாவாக 1935 ஆம் ஆண்டு மார்ச் 6 ஆம் நாள் சென்னைப் பல்கலைக் கழகப் பேரவை அரங்கில் ராவ்பகதூர் கே.வி. கிருஷ்ணசாமி அய்யர் போன்ற பெருமக்கள் முயற்சியால் சிறப்பாக நடைபெற்றது.

அவ்விழாவில் பெயர் குறிப்பிடாத ஒரு தமிழன்பர் 'பிள்ளையவர்கள் சரித்திரமே இவ்வளவு ரசமாயிருக்கிறதே. அய்யர் அவர்கள் சரித்திரம் வெளிவந்தால் தமிழ்நாட்டினர்க்கு மிகப் பயன்படுமே' என்று கூறி அய்யரவர்கள் சுய சரித்திரப் பதிப்பிற்காக ருபாய் 501 அன்பளிப்பாக அளித்தார்[1]

1935 ஆம் ஆண்டு சதாபிடேக விழாவிற்குப்பின் சுயசரிதம் எழுத வேண்டும் என்று அய்யரவர்கள் விரும்பினார்கள்.

---

1. என் சரித்திரம், முன்னுரை-6

ஆனாலும் பல்கலைக் கழகத்தாரின் விருப்பத்திற்கு ஏற்பக் குறுந்தொகைப் பதிப்புப்பணி நடைபெற்றதால் சுயசரித்திரம் எழுதும்பணி தள்ளிப் போயிற்று. 1937 இல் குறுந்தொகை வெளிவந்தது

இரசிகமணி டி.கே. சிதம்பரநாத முதலியார், கல்கி, ரா.கிருஷ்ணமூர்த்தி போன்ற பெருமக்கள் 28.11.1939 அன்று வீட்டுக்கே வந்து அய்யர் அவர்களைச் சுயசரித்திரம் எழுதுமாறு வற்புறுத்தினார்கள்.

சரித்திரம் முழுவதையும் எழுதி முடித்து ஒரு தனி நூலாக வெளியிட வேண்டும் என்று நினைத்தாலும் அவ்வாறு செய்வதில் அதிக நாட்கள் ஆகலாம்; அதைக் காட்டிலும் தொடக்க காலத்திலிருந்து வரலாற்றுச் செய்திகளைப் பத்திரிகை மூலம் வெளியிட்டால் படிப்பவர்க்கு மிக வசதியாக இருக்கும் என்று சில அன்பர்கள் கூறினார்கள்.

எஸ்.எஸ். வாசன் அவர்களின் வெளியீடான ஆனந்தவிகடனுக்கு கல்கி ரா.கிருஷ்ணமூர்த்தி அவர்கள் அப்போது முதன்மை ஆசிரியராக இருந்தார்கள். அவர்கள் இருவரின் வேண்டுகோள்படி வாராவாரம் ஓர் அத்தியாயம் ஆனந்தவிகடனில் வெளிவர வேண்டும் என்று ஏற்பாடானது. அய்யர் அவர்களின் குறிப்புகளை வைத்து அய்யர் அவர்களைக் கலந்து கொண்டு சரித்திரத்தை அய்யர் அவர்களின் மாணாக்கர் கி.வா.ஜகந்நாதன் அவர்கள் எழுதும் பணியை மேற்கொண்டார்கள்.

15.12.1939 இல் சுயசரித்திரத்தின் முதல் அத்தியாயம் எழுதி அளிக்கப்பட்டது. 1940 சனவரி 6 ஆம் நாள் முதல் அத்தியாயம் ஆனந்த விகடனில் வெளிவந்தது. 1942 மே மாதம் வரை 122 அத்தியாயம் வெளிவந்தது. பிறப்பு முதல் 1898 ஆம் ஆண்டு மணிமேகலை பதிப்பு வரை 43 ஆண்டு கால வரலாற்றுக் குறிப்பே வெளிவந்தது.[2]

அய்யர் அவர்கள் வரலாற்றுச் சுருக்கம் சாகித்ய அகாடெமி மூலம் தமிழ், ஆங்கிலம், இந்தி, மலையாளம், தெலுங்கு, கன்னட மொழியில் வெளிவந்துள்ளது. தொகுத்து வெளியிட்டவர் கி.வா. ஜகந்நாதன் அவர்கள்.

---

2. மேலது, ப7.

அய்யர் அவர்கள் மறைவிற்கு பின் திருப்பனந்தாள் காசிமடத்து அதிபர் தவத்திரு அருள்நந்தித் தம்பிரான் அவர்கள் வேண்டுகோளாலும், உதவியாலும் மற்ற தமிழ் அன்பர்கள் விருப்பத்திற்கேற்பவும் 1950 ஆம் ஆண்டு முதல் பதிப்பும், 1982 ஆம் ஆண்டு இரண்டாம் பதிப்பும் வெளிவந்தன. தமிழ்ப் பல்கலைக் கழகமும் அப்பதிப்பை மீண்டும் வெளியிட்டது.

### என் சரித்திரச் சிறப்பு

'என் சரித்திரம்' என்ற அய்யர் அவர்களின் தன் வரலாற்று நூல் பற்றித் தம் ஆய்வு நூலில் சொல் விளங்கும் பெருமாள் அவர்கள் பின்வருமாறு கூறுகிறார்.

'இத் தன்வரலாற்றில் வரலாற்று நாயகரது குடும்ப வாழ்வு பெரிதும் சுட்டப் பெறுவதில்லை. அவருடைய தமிழ் ஆர்வம், மீனாட்சி சுந்தரம்பிள்ளையிடம் அவர் கொண்டிருந்த அன்பு, தமிழை வளர்த்த வள்ளல்களின் கொடைத்தன்மை, அக்கால மக்களின் வாழ்க்கைமுறை போன்றவற்றை மிக விரிவாகக் காட்டுகிறது.

அவர்கால அரசியல் போராட்டங்களின் தாக்கமோ, சமுதாயப் புரட்சியின் நிழல்களோ அதில் படியவில்லை. பதிப்புப் பணியில் தன்னை முழுவதும் அர்ப்பணித்துக் கொண்ட ஏதுவால் புறச்சூழல்கள் ஏதும் இவரைப் பாதிக்கவில்லை. வார இதழில் தொடர் கட்டுரைகளாக வெளிவந்தமையால் பெரும்பாலான அத்தியாயங்கள் ஆர்வம் தூண்டும் முடிவுகளைக் கொண்டவையாயும், நகைச்சுவை இழையோடுவனவாகவும், உவமைகளாலும், இனிமை சேர்க்கும் பழமொழிகளாலும் அழகு மிளர்கிறது. இதன் பிற்பகுதி முழுவதும் சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், பத்துப்பாட்டு, மணிமேகலை போன்ற நூல்களின் பதிப்பு வரலாற்றைக் கூறுவதாக அமைந்துள்ளது' என்பது அவர்தம் உரையாகும்.[3]

'என் சரித்திரம்' 43 ஆண்டு காலத் தமிழ்ச் சரித்திரமாகவே விளங்குகிறது. அய்யர் வாழ்வு தமிழ் வாழ்வு அல்லவா?

### பிறர் வரலாறுகள்

மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்கள் வரலாறு வெளிவந்ததுடன் அதில் உள்ள பல சுவையான இலக்கிய

3. டாக்டர் உ.வே.சா., பதிப்புப்பணி, ப.27.

நிகழ்ச்சிகளைப் பலர் பாராட்டினர். அய்யர் அவர்கள் தம் வாழ்வில் எந்தப் பெரியார்களோடு பழக நேர்ந்ததோ அவர்களைப் பற்றிய வரலாறுகளையும், நிகழ்ச்சிகளையும் சுவை ததும்ப எழுதினார்கள். அந்த வகையில் 1936 ஆம் ஆண்டு மதுரைச் செந்தமிழ் மூலமாக,

**'மகா வைத்தியநாதய்யர், கனம் கிருஷ்ணய்யர்**
**கோபால கிருஷ்ண பாரதியார்'**

ஆகியோர் சரித்திரம் விரிவாக வெளியானது. பின்னர் இவை நூல் வடிவம் பெற்றன.

**'பூண்டி அரங்கநாத முதலியார், மணி அய்யர்,**
**வி.கிருஷ்ணசாமி அய்யர், திவான் சேஷையா'**

ஆகியோர் சரித்திரம் சுருக்கமாகவும் வெளியானது.

அய்யர் அவர்கள் கல்லூரிப் பணியில் சேர்வதற்கு மிகவும் உதவிய தியாகராச செட்டியார் வரலாற்றையும் அய்யர் வெளியிட்டார். தன் வீட்டிற்கு அவர் நினைவாகத் 'தியாகராச விலாசம்' என்று பெயரிட்டார்.

அய்யர் அவர்கள் தந்தையார் வேங்கட சுப்பையர் சிறந்த இசைப் புலவர். கனம் கிருஷ்ணய்யரின் மாணவர், கோபால கிருஷ்ண பாரதியார் நந்தனார் சரித்திரக் கீர்த்தனை பாடிப் புகழ்பெற்றவர். இருவரும் அய்யர் அவர்கள் தந்தையார்க்கு மிக நெருங்கிய நண்பர்கள் மகா வைத்தியநாதய்யர் தமது இசைப் புலமையால் திருவாவடுதுறை மடத்தில் 'மகா' என்னும் பட்டம் பெற்றவர்- இம்மூன்று இசை மேதைகள் வரலாற்றில் இசை பற்றிய பல அரிய செய்திகளும் கீர்த்தனைகள் சிலவும் உள்ளன.[4]

இந்த வரலாறுகள் எல்லாம் அக்காலத்தில் நடந்த சுவையான பல சம்பவங்களை விளக்கின. ஆர்வத்துடன் அதைப் படித்த அன்பர்கள் மிக மகிழ்ந்தனர். பல பத்திரிக்கையாளர்கள் தங்கள் வெளியீடுகட்கும், சிறப்பு மலர்கட்கும் அய்யரிடம் கட்டுரைகள் கேட்கத் தொடங்கினர். பல கல்லூரிகளிலும், மாநாடுகளிலும், பொது நிகழ்ச்சிகளிலும் அய்யர் அவர்கள் பேசிய

4. டாக்டர் உ.வே.சா., பதிப்புப்பணி, ப.22.

உரைகள் பல இதழ்களில் வெளிவந்தன. பல இதழ்கட்கு அய்யர் அவர்கள் நேரடியாகக் கட்டுரைகளும் எழுதினார்கள். 'கலைமகள்' இதழில் பல கட்டுரைகள் வெளிவந்தன. தினமணி, ஹனுமான், மணிக்கொடி, சில்பஸ்ரீ, ஆனந்த போதினி, தனவணிகன், ஆடல்பாடல், ஆனந்தவிகடன், தாருல் இஸ்லாம், சுதேசமித்திரன், ஐயபாரதி போன்ற பல இதழ்கள் தம் இயல்பான இதழ்களாலும், சிறப்பு மலர்களாலும் அய்யர் அவர்களின் எழுத்தோவியங்களைத் தாங்கும் பேறு பெற்றன.

மேற்கண்ட இதழ்களில் வெளிவந்த கட்டுரைகளும், பிற உரைகளும் 1936-1942 ஆண்டுகளில் தொகுப்பு ஆக நூல் வடிவம் பெற்றன. அவை 'நான் கண்டதும் கேட்டதும்' (1936), 'புதியதும் பழையதும்' (1936), 'நல்லுரைக் கோவை' (4 பாகம்) (1937), 'நினைவு மஞ்சரி (2 பாகம்) (1940, 1942) என்ற தலைப்பில் நூல்களாக வெளிவந்தன.

இத்தொகுப்பு நூல்கள் வெளியிடுவதன் நோக்கம் பற்றி அய்யரவர்கள் 'நினைவு மஞ்சரி' முதல்பாக முன்னுரையில் பின்வருமாறு கூறுகிறார்.

'காலத்திற்கும் நாகரிகத்துக்கும் பழக்க வழக்கங்களுக்கும் ஏற்றபடி ஜனங்களுடைய கருத்துக்களும் விருப்பங்களும் மாறி வருகின்றன. செய்யுள் நூல்களே எங்கும் பரவி வசன நடை நூல்கள் அருகி வழங்கும் காலம் ஒன்று. இப்பொழுது செய்யுள் நூல்கள் குறைந்தும் வசன நூல்கள் அதிகமாகவும் வழங்கி வருகின்றன. காரணம் செய்யுளைக் காட்டிலும் வசனம் மூலமாக ஜனங்கள் விஷயங்களை மிகவும் சுலபமாகத் தெரிந்து கொள்ள இயல்வதுதான்.

ஆண்டுதோறும் நூற்றுக்கணக்கான வசன நூல்கள் பல துறைகளிலும் இயற்றப் பெற்று வெளியாகி வருகின்றன.

என் இளமை முதல் என் ஞாபகம் முழுவதும் செய்யுள் நூல்களிலேயே ஊன்றியிருந்தமையால் வசன நூல்களில் என் கருத்து அதிகமாகச் செல்லவில்லை. ஆயினும் சில வருஷங்களாகப் பல பத்திரிக்கைக்காரர்கள் தூண்டவே என் அனுபவத்தில் கண்ட விஷயங்களையும், நான் அவ்வப்போது தெரிந்து கொண்டவற்றையும், என் ஞாபகத்தில் உள்ளவற்றையும் எழுதி வரத் தொடங்கினேன். அவற்றைப் படித்த அன்பர்கள்

மிகவும் பாராட்டிக் கடிதம் எழுதினார்கள். அதனால் மேலும் மேலும் எழுத எனக்கு ஊக்கம் உண்டாயிற்று. வசன நூல்களை ஜனங்கள் மிக்க ஆவலுடன் படிக்கிறார்கள் என்பதையும் அறிந்து கொண்டேன் என்பது அய்யர் அவர்கள் எழுத்தாகும்.[5]

இக்கட்டுரைகள் பற்றி அய்யர் அவர்கள் மாணாக்கர் பின்வருமாறு கூறுகிறார். 'அவர்கள் ஓய்வு பெற்ற பிறகு தமிழ் நூல்களைப் பதிப்பிப்பதோடு தம்முடைய அனுபவங்களை எளிய இனிய உரைநடையில் எழுதத் தொடங்கினார்கள். இந்தத் துறையில் அய்யரவர்கள் தொண்டாற்றப் புகுந்தபோது பெரியவர்களும், சிறுவர்களும், ஆடவரும், பெண்டிரும், புலவர்களும் பிறரும் ஒருங்கே இவர்கள் எழுத்தைப் படித்து இன்புற்றார்கள்' என்பன அவர்கள் கருத்தாகும்.

**கதைச் சுருக்க நூல்கள்**

பௌத்த நூலாகிய மணிமேகலையையும், சமண நூலான பெருங்கதையையும் முறையே 1898ஆம் ஆண்டும், 1924 ஆம் ஆண்டும் அய்யர் அவர்கள் பதிப்பித்தார்கள். மணிமேகலைக்குத் தாம் உரை எழுதியும், பெருங்கதையைக் குறிப்புரையுடனும் வெளியிட்டார்கள்.

செய்யுள் நூல்களை உரையுடன் படிப்பார் சுருங்கி வருவதை அறிந்த அய்யரவர்கள் மூலநூலைப் படிக்காமல் கதையை மட்டும் எளிமையாகத் தெரிந்து கொள்ள வேண்டி அந்தஅந்த நூல்களின் முன்னுரையில் கதைச் சுருக்கம் இருந்தாலும்,

**'மணிமேகலைக் கதைச் சுருக்கம்** *(1898)*

**'உதயணன் சரித்திரச் சுருக்கம்'** *(1924)*

என்ற தனித்தலைப்பில் உரைநடை நூல்களாக அந்நூல்கள் வெளிவந்த ஆண்டே வெளியிட்டது சிறப்புக்குரியது. இச்சுருக்க நூல்கள் மக்களிடையே பெரும் வரவேற்பைப் பெற்றன.

**மத்தியார்ச்சுன மான்மியம்**

திருவாவடுதுறை ஆதீனத்திற்கு உட்பட்ட பல கோயில்களில் திருவிடை மருதூர்க் கோயிலும் ஒன்று. அக்கோயிலில் நெடுநாள் நின்று போயிருந்த வசந்தோத்சவம்

5. நினைவு மஞ்சரி (முதல் பாகம்), முன்னுரை, ப.1.

அக்கோயில் விசாரணைக் கருத்தராகிய சுப்பிரமணியத் தம்பிரான் அவர்கள் முயற்சியால் மீண்டும் நடைபெறத் தொடங்கிய போது, அக்கோயில் சிறப்பை அய்யர் அவர்கள் எழுத வேண்டும் என்று சுப்பிரமணியத் தம்பிரானால் கேட்டுக் கொள்ளப்பட்டார்.

அக்கோயிலுக்கு ஞானக்கூத்தர், கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர் என்னும் இருவர் எழுதிய தலபுராணங்கள் உண்டு. அவற்றைப் படித்துக் குறிப்பெடுத்துக் கொண்டு 'ஸ்ரீமத்தியார்ச்சுன மான்மியம்' என உரைநடையில் எழுதி மூர்த்தி, தலம், தீர்த்தம், வழிபட்டோர் வரலாறும் எழுதிச் சென்னை சென்று அய்யர் ஜீவரஷாமிர்த அச்சுக்கூடத்தில் அச்சிடச் செய்தார்கள்.[6]

இந்நிகழ்ச்சி சீவகசிந்தாமணிப் பதிப்பிற்கு இரண்டு ஆண்டுகள் முன்னர் 1885 ஆம் ஆண்டு நடைபெற்றது. சென்னையில் நீதிபதி இராமசாமி முதலியார் அவர்கள் வீட்டில் தங்கிப் பதிப்புப் பணியை அய்யர் அவர்கள் செய்தார்கள்.

அதுவரை சென்னையைப் பார்த்திராத அய்யர் இராமசாமி முதலியார் பழக்கத்தால் சென்னையில் அன்று இருந்த அத்துணை தமிழ் அறிஞர்களையும், பெருமக்களையும் சந்தித்தார், ஜட்ஜ் முத்துசாமி அய்யர், சர்.வி. பாஷ்யம் அய்யங்கார், பம்மல் விஜயரங்க முதலியார், பூண்டி அரங்கநாத முதலியார், தொழுவூர் வேலாயுத முதலியார், புரசவாக்கம் அட்டாவதானி சபாபதி முதலியார், திருமயிலை சண்முகம்பிள்ளை, போன்ற பெருமக்களின் நீண்ட பட்டியலை அய்யர் அவர்கள் தம் சரித்திர நூலில் குறிப்பிடுகின்றார். இச்சென்னைப் பயணம் அய்யர் அவர்கட்கு மிகவும் பயனுடையதாக இருந்தது.

பிற்காலத் தமிழ் வாழ்விற்கும், நூல்கள் பதிப்பிற்கும் அச்சென்னைப் பயணம் 'கரும்பு தின்னக் கூலியாக' அமைந்தது என அய்யர் அவர்கள் பெருமையுடன் கூறிக் கொள்கிறார்கள். 'ஸ்ரீமத்தியார்சன மான்மியம்' நூல் 58 ஆண்டுகட்குப் பின் 1943 ஆம் ஆண்டு அய்யர் அவர்கள் மறைவிற்குப் பின் மீண்டும் வெளியிடப்பட்டது. அய்யர் அவர்கட்குப் பதிப்புப் பணிக்கு நல்ல பயிற்சியையும், அனுபவத்தையும் இந்நூற் பதிப்புக் கொடுத்தது.

---

6. என் சரித்திரம், ப.565.

## இரு அரிய நூல்கள்

மணிமேகலை பதிப்பிக்கும் போது பெற்ற பெரும் அனுபவத்தால் புத்தர், பௌத்தமதம் பற்றிய பல செய்திகளை அறிந்து கொண்ட அய்யர் அவர்கள் மணிமேகலை வெளிவந்த அந்த ஆண்டே 'புத்தசரிதம்' என்னும் உரைநடை நூலைச் சிறப்புடன் வெளியிட்டார்கள் (1898). சதாபிடேக விழாவின் 1936ஆம் ஆண்டு 'திருக்குறளும் திருவள்ளுவரும்' என்ற சிறப்பான நூலை வெளியிட்டார்கள்.

## சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும்

உரைநடைத் தொகுப்பு நூல்களில் முதலாவதாகவும், சிறப்புடையதாகவும் திகழுவது சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும் என்ற நூல். சென்னைப் பல்கலைக்கழகத்தாரின் வேண்டுகோளுக்கு இணங்க 7..11..1927 முதல் 21.12.1927 முடிய பத்து நாட்கள் அய்யர் அவர்கள் ஆற்றிய உரைகளின் தொகுப்பே இந்நூல் ஆகும்.

1. தமிழ்ச் சங்கம், 2. முத்தமிழ், 3. சங்க நூல்களில் கூறப்படும் தெய்வங்கள், 4. சங்க காலத்துப் புலவர்கள்-ஆண் பாலார், 5. சங்க காலத்துப் புலமை வாய்த்த பெண்பாலார், 6. சங்கப் புலவர்களை ஆதரித்த பிரபுக்கள், 7.கலைகள், 8. பண்டை உரையாசிரியர்கள், 9. சங்க காலத்திற்குப் பிறகு தமிழை ஆதரித்த புரபுக்களும் புலவர்களும். 10. ஆராய்ச்சி என்னும் பத்துத் தலைப்புக்களில் இச்சொற்பொழிவுகள் அமைந்தன. அதே வரிசையில் நூலும் அமைந்துள்ளது.

பல அரிய செய்திகளைத் தாங்கிய இந்நூல் ஓர் இலக்கிய வரலாறாகவே திகழ்கிறது. 1927இல் ஆற்றிய இந்த உரைகளின் தொகுப்பு 1929 ஆம் ஆண்டு நூலாக வெளிவந்தது. இந்நூலும் பல பதிப்புக்களைக் கண்டுள்ளது.

# 7. பன்முக மாட்சி

## சுவடிகளின் தன்மையும் அய்யர் கொள்கையும்

ஓலைச் சுவடிகளின் தன்மை, அதைப் பதிப்பிப்பதில் அய்யரவர்கள் மேற்கொண்ட கொள்கை ஆகியவை பற்றி என் சரித்திரம் மூலமாக நமக்குச் சில செய்திகள் தெரிகின்றன.

'இது கொம்பு, இது சுழி என்று வேறு பிரித்து அறிய முடியாது, மெய்யெழுத்துக்களுக்குப் புள்ளியே இராது. ரகரத்துக்கும் காலுக்கும் வேற்றுமை தெரியாது. சரபம் சாபம் ஆகத் தோன்றும். சாபம் சரபம் ஆகத் தோன்றும். ஓரிடத்தில் சரடு என்று வந்திருந்த வார்த்தையை நான் சாடு என்றே பலகாலம் எண்ணியிருந்தேன். தரன் என்பதைத் தானென்று நினைத்தேன். 'யானை நாகத்திற் றோன்றுதலின்' என்று ஓரிடத்தில் இருந்தது. யோசித்து யோசித்துப் பார்த்தேன். யானைகளில் வனசரம், நதிசரம், கிரிசரம் என்று மூன்று வகையுண்டென்று கேட்டிருக்கிறேன். நாகம் என்பது மலையாக இருக்குமென்றும், கிரிசரமாகிய யானையைக் குறித்ததாகக் கொள்ளலாம் என்றும் தோன்றியது. ஒரு நண்பர் 'ஜைன சம்பிரதாயத்தில் நாகத்தின் வயிற்றில் யானை முதலில் பிறந்ததென்று இருக்கலாமோ என்னவோ! 'என்று ஒரு சந்தேகத்தைக் கிளப்பினார். அது நாகத்தில் பிறந்ததோ அல்லது நரகத்தில் பிறந்ததோ ஒன்றும் விளங்கவில்லையே!' என்று சொல்லிச் சிரித்தேன்.[1]

'யானை நகரத்தில் தோன்றுதலின் அதற்கு வணங்குதல் இயல்பு' என்று நச்சினார்க்கினியர் எழுதுகிறார். காந்தருவதத்தையோடு இசை பாடித் தோல்வியுற்றவர்களை நோக்கி,

> 'இசையினில் இவட்குத் தோற்றாம் யானையில்
> வேறு மென்னின் இசைவதொன் றன்று கண்டீர்'

---

1. என் சரித்திரம், ப.614.

என்று ஒருவன் சொன்னதாக வரும் சந்தர்ப்பத்தில் யானையால் வெல்லுதல் அரிது என்பதை விளக்குவதன் பொருட்டு நச்சினார்க்கினியர் அந்த வாக்கியத்தை எழுதியிருக்கிறார். ஆகவே அங்கே இசையோடு சம்பந்தமுடைய விஷயம் இருந்தால்தான் பொருத்தமாக இருக்கும். இவற்றையெல்லாம் யோசிக்கையில் யானை நாதத்திற் றோன்றுதலின் என்று இருக்க வேண்டும் என நிச்சயித்தேன். பல பிரதிகளில் தெளிவாக 'நாகத்தில்' என்றே இருந்தது. ஒரு பிரதியில் மாத்திரம் 'நாதத்தில்' என்ற பாடம் காணப்பட்டது'

மேற்கண்ட அய்யர் அவர்கள் எழுதிய பகுதியிலிருந்து சுவடிகள் படிப்பதன் அருமையையும், அதைப் பாடம் கொள்ளுதலின் தன்மையையும் அதன் சிரமத்தையும் மயக்கத்தையும் அறிகிறோம்.

சுவடிப் பதிப்பில் அவர் கொண்டிருந்த கொள்கை பற்றிக் கீழ்வரும் குறிப்பிலிருந்து அறியலாம்.

'எழுத்தும் சொல்லும் மிகுந்தும் குறைந்தும் பிறழ்ந்தும் திரிந்தும் பலவாறு வேறுபட்டுக் கிலமுற்றிருந்த இந்நூலுரைப் பழைய பிரதிகள் பலவற்றையும் பலகால் ஒப்பு நோக்கி அடியறாது பரிசீலனை செய்து வந்த பொழுது கவிகளின் சுத்த வடிவத்தையும் உரையின் சுத்த வடிவத்தையும் கண்டுபிடித்ததற்கும், உரையினுள் விசேடவுரை இன்னது பொழிப்புரை இன்னது என்று பிரித்தறிதற்கும் மேற்கோள்களின் முதல் இறுதிகளைத் தெரிந்து கோடற்கும் பொழிப்புரையை மூலத்தோடு இயைத்துப் பார்த்ததற்கும் பிழையைப் பிழையென்று நிச்சயித்துப் பரிகரித்தற்கும், பொருள் கோடற்கும் எடுத்துக் கொண்ட முயற்சியும், அடைந்த வருத்தமும் பல.[2]

ஏட்டுச் சுவடிகளில் கண்ட பாடங்களின் வேறுபாட்டைக் கண்டு கண்டு என் மனம் புண்ணாகியிருந்தது. இன்னபடி இருந்தால் பொருள் சிறக்குமென்று எனக்குத் தோன்றின இடங்களிலும் பிரதியில் உள்ளதையே பதிப்பித்தேன். என்னுடைய கருத்தையோ திருத்தத்தையோ சிந்தாமணியில் ஏற்றாமல் மிகவும் ஜாக்கிரதையாகக் கவனித்துப் பதிப்பித்தேன். பதிப்பிக்கத் தொடங்கிய நூல் எனக்கு ஒரு தெய்வ விக்கிரகம் போல இருந்தது. அதன் அழுக்கைத் துலக்கிக் கவசமிட்டுத்

2. என் சரித்திரம், ப.614

தரிசிக்க வேண்டுமென்பதே என் ஆசை. 'கைகோணி இருக்கிறது. வேறு விதமாக அமைக்கலாம். நகத்தை மாத்திரம் சிறிது திருத்தலாம்' என்ற எண்ணம் எனக்கு உண்டாகவில்லை. அதன் ஒவ்வோரணுவிலும் தெய்வீக அம்சம் இருக்கிறதென்றே நம்பினேன். அழுக்கை நீக்கி விளக்குவதற்கும் அங்கத்தையே வேறுபடுத்துவதற்கும் உள்ள வித்தியாசத்தை நன்றாக அறிந்திருந்தேன். இக்கருத்தைப் 'புராதனமான தமிழ் நூல்களும் உரைகளும் பண்டை வடிவம் குன்றாதிருத்தல் வேண்டுமென்பதே எனது நோக்கமாதலின் பிரதிகளில் இல்லாதவற்றைக் கூட்டியும், உள்ளவற்றை மாற்றியும் குறைத்தும் மனம் போனவாறே அஞ்சாது பதிப்பித்தேனல்லேன். ஒரு வகையாகப் பொருள் கொண்டு பிரதிகளில் இருந்தவாறே பதிப்பித்தேன். யானாக ஒன்றும் செய்திலேன் என்பது அய்யரவர்கள் எழுதியுள்ள பகுதியாகும். இதனால் அய்யர் அவர்களின் பதிப்புக் கொள்கை நன்கு விளங்குகிறது.

### முதல் நூல்–பாடியதும், பதிப்பித்ததும்

அய்யர் அவர்கள் கவிஞர் என அறிமுகம் ஆகாவிடினும் நல்ல கவிதை இயற்றும் ஆற்றல் உடையவர். அவர் இயற்றிய கவிதைகள் 'தமிழ்ப்பா மஞ்சரி' என இரண்டு தொகுதிகளாகவும், 'கயற்கண்ணி மாலை' என ஒரு தொகுதியாகவும் ஆக மூன்று கவிதை நூல்கள் வெளிவந்துள்ளன.

அய்யர் அவர்கள் தம் பத்தொன்பதாம் வயதில் 'நீலி இரட்டைமணி மாலை' என இயற்றிய நூலே அவருடைய முதல் கவிதை நூலாகும். அய்யர் தன் தந்தையாரோடு செங்கணம் என்ற ஊருக்குச் சென்றார். அங்கு விருத்தாசல ரெட்டியார் என்ற செல்வர் ஆதரவில் இருந்தார்கள். விருத்தாசல ரெட்டியார் சில காலம் கடும் நோய்வாய்ப்பட்டிருந்தார்.

விருத்தாசல ரெட்டியாரின் மூத்த குமாரர் நல்லப்ப ரெட்டியார் அய்யரிடம் 'நீங்கள் பெரியவர் மகன், எங்கள் குலதெய்வம் குறித்துப் புதிய தோத்திரப் பாக்கள் பாடினால் எங்கள் தந்தையாருக்கு அனுகூலமாயிருக்கும்' என்று கூறினார்.

அதைக்கேட்ட அய்யரவர்கள் அவ்வாறே பாடுவதற்கு ஒப்புக் கொண்டு அவர்கள் குலதெய்வமாகிய நீலி என்னும் துர்க்கை மீது 'நீலி இரட்டைமணிமாலை' என்ற நூலை இயற்றித் தந்தார். இந்நூலின் பாடல்களை விருத்தாசல ரெட்டியார் நாள்தோறும் ஓதிவந்தார். அதில் ஒரு பாடல்

> **'கடல்வாய் வரும்அமு தஙசனர் போற்றக்**
> **கவின்திகழும்**
> **மடல்வாய் சலச மடந்தையர் வாழ்ந்த மணித்தவிசின்**
> **அடல்வாய் அருளுறை மேவிய நீலி அடிபணிந்தோர்**
> **கெடல்வாய் பிணியினைப் போழ்ந்தே சதாஇதம்**
> **கிட்டுவரே'**

என்பதாகும். இந்நூல் 1874ஆம் ஆண்டு இயற்றப்பட்டதாகும்.[3] அப்போது அய்யருக்கு வயது 19 தான்.

திருநெல்வேலியில் மேலைரத வீதியில் திருவாவடுதுறை ஆதீனத்திற்குரிய மடம் ஒன்று இருந்தது. அதனை ஈசானமடம் என்று கூறுவார்கள். அந்த மடத்தில் ஒரு சமயம் அய்யர் அவர்கள் தங்கியிருந்தார்கள். அங்கு வந்த திருவாவடுதுறை ஆதீனத் தலைவர் சுப்பிரமணிய தேசிகருடன் அய்யர் அவர்கள் கல்லிடைக் குறிச்சி சென்றார்கள். பின் உடன் வந்திருந்த வேணுவனலிங்கத் தம்பிரான் விரும்பியபடி செவந்திபுரம் மடத்தில் சுப்பிரமணிய தேசிகன் தங்கினார்கள். மதுரை நாயக்க மன்னர் அதிகாரியாகிய செவந்தியப்ப நாயக்கரால் திருவாவடுதுறை மடத்திற்கு விடப்பட்ட எட்டுக் கிராமங்களில் செவந்திபுரம் ஒன்று. அவரால் ஏற்படுத்தப்பட்ட செவந்தீசுவரம் சிவன் கோயிலும் சிறப்பாக அங்கு உண்டு.

வேணுவனலிங்கத் தம்பிரான் அங்குக் கட்டிய மடத்திற்குச் 'சுப்பிரமணிய விலாசம்' என்று பெயர் வைத்திருந்தார். சுப்பிரமணிய தேசிகர் அங்கு வந்த நாள் ஒரு விழாவாகவே கொண்டாடப்பட்டது. அந்த அழகிய மடாலயத்தைச் சிறப்பித்துப் பல வித்துவான்கள் பாடல் இயற்றினர். அன்று பட்டணப் பிரவேசம் முடிந்தவுடன் அதிகாலை இரண்டுமணிக்கு மேல் எல்லோருடைய பாடல்களையும் தேசிகர் முன்னிலையில் அய்யர் அவர்கள் படித்துக் காட்டினார். மகாவைத்திய நாதய்யர், அவர் தமையனார் ஆகியோர் பாடல்களும் அவற்றில் இருந்தன. அய்யர் அவர்கள் எட்டுப் பாடல்கள் பாடியிருந்தார்.

அப்பாடல்களைத் தனி நூலாகப் பதிப்பிக்க வேண்டும் என வேணுவனலிங்கத் தம்பிரான் அவர்கள் விரும்பினார்கள். திருவாவடுதுறை மடத்தில் உள்ள 'வேணுவனலிங்க விலாசம்'

---

3. என் சரித்திரம், ப.364.

என்னும் அழகிய மண்டபத்தைப் பற்றிய பாடல்களையும் உடன் அச்சிட அன்பர்கள் விரும்பினார்கள். இரண்டுவகைப் பாடல்களையும் சேர்த்துத் திருநெல்வேலி முத்தமிழாகரம் என்னும் அச்சுக்கூடத்தில் பதிக்கப்பட்டது.

அய்யர் அவர்கள் தம் சுயசரித்திரத்தில் ‘பிற்காலத்தில் எவ்வளவோ புஸ்தகங்களைப் பரிசோதித்து வெளியிடும் வேலையில் ஈடுபட்ட நான் முதல் முதலாகப் பதிப்பித்தது அந்தப் பாடல் திரட்டே. அக்காலத்தில் பதிப்புமுறை சிறிதும் எனக்குத் தெரியாது. ஆனாலும் நான் பரிசோதித்து வெளியிட்ட முதல் புஸ்தகம் என்ற நினைவினால் அதனிடத்தில் எனக்கு ஒரு தனி மதிப்பு இருந்து வருகிறது’ என்று அந்நூல் பதிப்புப் பற்றி கூறுகிறார்கள்.

அதன் முதல் பக்கத்தில் கீழ்வருமாறு வாசகம் உள்ளது. ‘உ கணபதி துணை திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த செவந்திபுரத்தில் மேற்படி ஆதீனம் பெரிய காறுபாறு வேணுவனலிங்க சுவாமிகள் இயற்றுவித்த சுப்பிரமணிய தேசிக விலாசச் சிறப்பு மேற்படி திருவாவடு துறையில் மேற்படி சுவாமிகள் இயற்றுவித்த கொலுமண்டபம் என்னும் வேணுவனலிங்க விலாசச் சிறப்பு இவை பல வித்துவான்களால் பாடப்பட்டு மேற்படி ஆதீன அடியார் குழாங்களில் ஒருவராகிய ஆறுமுக சுவாமிகளாலும், மேற்படி திருவாவடுதுறை வேங்கட சுப்பையரவர்கள் புத்திரராகிய சாமிநாத ஐயரவர்களாலும் பார்வையிடப்பட்டு, திருநெல்வேலி முத்தமிழாகர அச்சுக் கூடத்தில் பதிப்பிக்கப்பட்டன. வெகுதான்ய வருஷம் ஆனி மாதம்’4 என்பன முதல் பக்கத்தின் வாசகங்களாகும். அப்புத்தகம் மொத்தம் 32 பக்கங்களில் அடங்கியது. அய்யர் அவர்கள் ‘அந்தப் புத்தகம் அச்சிட்டு வந்த காலத்தில் நானும் பிறரும் அதை வைத்து அழகுபார்த்துக்கொண்டேயிருந்தோம்’ என்று மகிழ்ந்து எழுதியுள்ளார்கள். அதில் ஆறுமுக சுவாமிகள் பெயர் மட்டுமே இருந்தது. அய்யர் அவர்களே எல்லாப் பணிகளையும் செய்தார்கள். அவற்றில் தியாகராச செட்டியாரின் பதின்மூன்று பாடல்களில் ஒரு பாடலில் அய்யர் அவர்களைப் பற்றிய செய்தி இருந்தது. அப்பாடல்

துன்னுறுபேர் இலக்கணமும் இலக்கியமும்
மீனாட்சி சுந்தரப்பேர்

**மன்றுறுநா வலர்பெருமான் இடையுணர்ந்தெல்**
**லாநலமும் வாய்ந்தன் னோன்பால்**
**பன்னுகவி சொல்சாமி நாதமறை**
**யோன் இயற்சண் பகக் குற்றாலம்**
**என்னுமுயர் பெயர்புனைந்த கவிராஜன்**
**முதற்பலரும் இயம்பி ஏத்த'**

என்பதாகும்

'வேணுவனலிங்க விலாசச் சிறப்பு' எனும் இந்நூல் 1878இல் பதிப்பிக்கப்பட்டது. அய்யர் அவர்களுக்கு அப்போது வயது 23 ஆகும்.

## உள்ளத்தை உருக்கும் நிகழ்ச்சிகள்

தமிழ்ச் செல்வத்தையெல்லாம் வரையாது நமக்கு வாரி வாரி வழங்கிய தமிழ்வள்ளல் அய்யர் அவர்கள் வாழ்வில் எத்துணையோ நிகழ்ச்சிகள் உள்ளத்தைத் தொடுபவையாகவும், உள்ளத்தை உருக்குவதாகவும் திகழ்ந்து நம் கண்களில் நீர் மல்கச் செய்து விடுகின்றன. பல நிகழ்ச்சிகள் இவ்வாறு உள்ளன. அவற்றுள் இரண்டு நிகழ்ச்சிகளை இங்கே காணலாம்.

அய்யரவர்கள் சீவகசிந்தாமணி, பத்துப்பாட்டு, சிலப்பதிகாரம் முதலியன பதிப்பு முடிந்து தமிழ் உலகில் புகழ்பெற்று வரும் காலம். 1892 ஆம் ஆண்டு கும்பகோணம் அரசினர் கல்லூரியில் பணியாற்றி வரும்போது, அவ்வாண்டு நவராத்திரி விழாவுக்கு அய்யர் அவர்களை வரவேண்டுமென்று சேதுபதி மன்னர் அழைத்திருந்தார்கள். பத்து நாட்கள் விடுமுறை எடுத்துக்கொண்டு அய்யரவர்கள் இராமநாதபுரம் சென்றார்கள்.

மதுரைவரை இரயிலில் சென்ற அய்யர் அவர்கள் மதுரையிலிருந்து மாட்டுவண்டி மூலமாக இராமநாதபுரம் சென்றார். தமிழகம் எங்குமிருந்து தமிழ் அறிஞர்களும், இசைவாணர்களும் அங்கு வந்திருந்தனர். அய்யர் அனைவரிடமும் பாராட்டுப் பெற்றார். பத்து நாட்களும் பொழுது போனதே தெரியாதவாறு அய்யர் அங்குத் தங்கியிருந்ததாகக் கூறியுள்ளார்.

நவராத்திரி விழா முடிந்து அய்யர் அவர்கள் புறப்படும்போது சேதுபதி வேந்தர் அய்யர் அவர்களை மிகவும்

4. என் சரித்திரம், ப.451.

பாராட்டி இரண்டு விலை உயர்ந்த சால்வைகள் போர்த்திப் பாராட்டி அனுப்பினார். சேதுபதி அவர்கள் கட்டளைப்படி தானாதிபதி நூறு ரூபாய் வழிச் செலவுக்குக் கொடுத்தார்.

கும்பகோணம் வந்து சால்வையை அய்யர் எல்லோரிடமும் காட்டினார். அனைவரும் மகிழ்ந்தார்கள். திருவாவடுதுறை அம்பலவாண தேசிகர் அவர்கள் அய்யர் அவர்களின் தகுதியறிந்து அளித்தசிறப்பு என்று மிகவும் பாராட்டினார்கள்.

இவை இரண்டும் என்ன விலைபெறும் என்று அய்யர் அவர்கள் தேசிகரிடம் கேட்டார்கள். தேசிகர் அவற்றின் மதிப்பு முந்நூறு ரூபாய்க்கு மேல் இருக்கும் என்றார்கள்.

'இந்தத் துப்பட்டியினால் எனக்கு என்ன பிரயோசனம்? இவற்றை இங்கேயே கொடுத்துவிடலாமென்று நினைக்கிறேன்' என்றார் அய்யர்.

'என்ன அப்படிச் சொல்லுகிறீர்கள். ஒரு பெரிய சமஸ்தானத்தில் பெற்ற மரியாதை. பத்திரமாக நீங்களே பாதுகாத்து வைத்துக் கொள்ளுங்கள்' என்றார் தேசிகர்.

அய்யர் 'சிலப்பதிகாரம் அச்சிட்டதினால் ஏற்பட்ட சிரமம் இருக்கிறது. அதைத் தீர்க்க வழியில்லை. இந்த இரண்டையும் வைத்துக் கொண்டு என்ன செய்யப் போகிறேன்; தமிழ்த்தாயின் திருப்பணியினால் வந்த கௌரவம் இவை. ஆகையால் இவற்றை மீண்டும் அதற்கே உபயோகப் படுத்துவதுதான் நியாயம்' என்றார்.

'இறுதியில் மடத்திலேயே அவற்றை எடுத்துக் கொண்டு அவற்றின் விலையாக ரூபாய் 300 எனக்கு அளிக்கச் செய்தார். நான் அத்தொகையைப் பெற்றுச் சிலப்பதிகாரப் பதிப்பினால் அப்போது இருந்த கடன் தொல்லையினின்றும் நீங்கினேன்' என்று அய்யர் எழுதியுள்ளார். 'மற்றும் கடன் தீர்ந்த சந்தோஷத்தில் தமிழ்நூல் பதிப்பைப் பற்றி யோசிக்கலானேன்[5] என்றும் எழுதியுள்ளார்கள்.[5]

'இறங்கு துறையில் நீத்தாயிற்று' என்பது போல அய்யர் அவர்கள் முதலில் பதிப்புக்கு எடுத்துக் கொண்ட பேரிலக்கிய

5. என் சரித்திரம், ப.722.

நூல் சீவகசிந்தாமணி, சென்னை தூளை, அவதானம் பரப்பையர் வீதியில் உள்ள திராவிட ரத்னாகரம் என்ற அச்சுக்கூடத்தில் சீவகசிந்தாமணி அச்சுக்குக் கொடுக்கப்பட்டது.

சிந்தாமணிப் பதிப்பிற்கும் பலர் கையொப்பமிட்டுப் பணம் தருவதாக வாக்களித்திருந்தனர். சிலர் அனுப்பினர். சிலர் காலதாமதம் செய்தனர்.

அச்சுக்கூடத் தலைவர் அ.கோவிந்த ஆசாரியார் ஒருமுறை சிந்தாமணி படிவங்கள் அச்சிடப் பணம் வேண்டுமென்று கேட்டார். அய்யர் கையில் பணம் இல்லை. சி.வை. தாமோதரம் பிள்ளை அவர்கள் மூலமாக காகிதக் கடைக்காரர் சண்முகம் செட்டியாரிடம் சில மாதங்கள் கழித்துப் பணம் தருவதாகக் கூறிக் காகிதம் வாங்கப்பட்டது.[6]

குறிப்பிட்ட காலத்திற்குள் காகிதக் கடைக்குக் கொடுக்கப் பணம் தேட அய்யரால் முடியவில்லை. கும்பகோணம் கல்லூரி ஆசிரியர்களிடம் கடனாகப் பணம் வாங்கி அய்யர் பணம் அனுப்பி வைத்தார்.

சீவகசிந்தாமணி அச்சுப்பணி முடிந்தது. திராவிட ரத்னாகரம் அச்சுக்கூடத்தில் புத்தகங்களை பைண்டு செய்ய வசதியில்லை. புத்தகங்களைத் திறமையுடனும், நாணயமாகவும் பைண்டு செய்ய முருகேச முதலியார் என்பவர் ஏற்றவர் என்று கேள்விப்பட்டு அவரிடம் கொடுக்க முடிவு ஆயிற்று. அச்சகத்திற்கு அச்சுக்கூலிப் பணத்தைக் கொடுத்த பின்னரே அச்சிட்ட படிவங்களை அச்சுக்கு அனுப்ப வேண்டிய நிலை ஏற்பட்டது.[7]

அய்யர் அப்போது சென்னையில் இருந்தார். நார்ட்டன் துரை என்னும் வழக்கறிஞரின் குமாஸ்தாவான திருவல்லிக்கேணி விசுவநாத சாஸ்திரிகள் அவர்களிடம் சென்று வட்டிக்கு முந்நூறு ரூபாய் கடன் வாங்கி அச்சகத்தற்குக் கொடுத்தார். அச்சுப் படிவங்கள் பைண்டுக்குச் சென்றன. சீவக சிந்தாமணி வெளியாயிற்று.

சேலம் இராமசாமி முதலியார் கையொப்பமிட்டிருந்த சிலரிடம் பணம் பெற்றுத் திருவல்லிக்கேணி விசுவநாத சாஸ்திரியார் அவர்களிடம் அய்யர் வாங்கியிருந்த கடனை

6. என் சரித்திரம், ப.581.

7. என் சரித்திரம், ப.613.

அடைத்தார். தன் தலையில் இருந்த சுமை இறங்கியது போன்ற மகிழ்ச்சியை அப்போது அய்யர் அவர்கள் பெற்றதாக எழுதியுள்ளார்.

இவ்வளவுக்கும் சிந்தாமணி அச்சிட்டது ஐநூறு பிரதிகள். நூறு பிரதி அச்சகத்தார் கவனக் குறைவால் பாழாகிவிட்டது. பதிப்பிக்கப் பெற்று விற்பனைக்கு வந்த மொத்தப் படிகள் நானூறுதான்!

சான்றோர் கடன்கொண்டும் கடன் (கடமை) செய்வர் என்பது மெய்யாயிற்று.

## மூல நூல் பதிப்புகள்

பத்துப்பாட்டு (1889), புறநானூறு (1894), பெருங்கதை (1924) ஆகிய நூல்களை உரையுடனும், குறிப்புரையுடனும் பல்வேறு விளக்கங்களோடு வெளியிட்ட அய்யர் அவர்கள் உரையின்றி அதன் மூலம் மட்டும் உள்ள இலக்கிய நூல்களையும் வெளியிட்டார்கள்.

மணிமேகலைக்கும், பெருங்கதைக்கும் உரைநடை நூல்களை அந்நூல் வெளியிட்ட ஆண்டிலேயே வெளியிட்ட அய்யர் அவர்கள் 1889இல் வெளியிட்ட பத்துப்பாட்டுக்கு 1931ஆம் ஆண்டும், 1894இல் வெளியிட்ட புறநானூறு நூலுக்கு 1936ஆம் ஆண்டும், 1924ஆம் ஆண்டு வெளிவந்த பெருங்கதைக்கு 1936ஆம் ஆண்டும், மூல நூலை வெளியிட்டார்கள். உரைகள் தழைத்தோங்கிய இக்கால கட்டத்தில் உரையின்றி நூலின் மூலம் மட்டும் அமைந்த பதிப்புக்களின் தோற்றுவாயாகவும் அய்யர் விளங்கினார் என்று அறிஞர் பாராட்டுவர்.

பின்னர் வெளிவந்த பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதிணென் கீழ்க்கணக்கு, ஐந்திலக்கணம், திருக்குறள், சித்தர் பாடல்கள் ஆகிய பற்பல மூல நூல்களுக்கு வழிகாட்டியாக அய்யர் அவர்கள் வெளியிட்ட மூலநூல்கள் அமைந்தன.

மர்ரே எஸ். ராஜம் அவர்கள் பதிப்பித்த சங்கநூல் பதிப்புகளுக்கும் (1957-1958), 1940-ஆம் ஆண்டு வெளிவந்த பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்களின் சங்கஇலக்கியம் (பாட்டும் தொகையும்) பதிப்பிற்கும் வழி காட்டியாக அமைந்தது அய்யர் அவர்களின் மூலநூல் பதிப்புக்களே. மூல நூலைப் படிக்கும் பழக்கத்தைச் சங்கஇலக்கியம் கற்கும் மாணவனை இந்நூல்கள் ஊக்குவித்தன.

அய்யர் அவர்கட்குக் கிடைத்த இலக்கிய ஏட்டுச் சுவடிகளில் பல மூலம் மட்டுமே உள்ள சுவடிகளாகும். எடுத்துக்காட்டாகப் புறநானூற்றுப் பதிப்பிற்கு அய்யர் அவர்களுக்குக் கையெழுத்துப் பிரதியாகவும், ஓலைச் சுவடிகளாகவும் கிடைத்த பிரதிகள் மொத்தம் 21 ஆகும். அவற்றில் எட்டுப் பிரதிகள் மூலம் மட்டுமே உள்ளவையாகும். உரை தோன்றுமுன் இலக்கியங்கள், இலக்கணங்கள் அனைத்தும் மூலம் மட்டுமே உள்ள பிரதிகளாகத்தான் இருந்தன.

எனவே அச்சு நூல்களிலும் மூலம் மட்டுமே உள்ள நூல்கள் தோன்றுவதற்கு மூலம் மட்டும் உள்ள ஓலைச்சுவடிகளே வழிகாட்டியாக அமைந்தது.

உரை தோன்றுமுன் மூலம் மட்டுமே எழுதப் பட்டிருந்தனபோல உரை தோன்றிய பின்னரும் மூலம் மட்டுமே ஏட்டுச் சுவடிகளில் எழுதும் வழக்கமும் இருந்துள்ளது தெரிகிறது.

அய்யர் அவர்கள் மூலம் மட்டும் அடங்கிய பதிப்புக்கள் வெளிவரும் முன்னரே 1920ஆம் ஆண்டு கா.ரா. நமச்சிவாய முதலியார் பத்துப்பாட்டு மூலம் மட்டும் பதிப்பிக்க முயற்சி செய்தார். 1930ஆம் ஆண்டு கலித்தொகை மூலம் மட்டும் உள்ள பதிப்பை இ.வை. அனந்தராமையர் பதிப்பித்தார். அய்யர் அவர்கள் புறப்பொருள் வெண்பாமாலை உரையுடன் பதிப்பிக்கு முன்னரே சரவணப் பெருமாளையரால் மூலம் வெளியிடப்பட்டிருந்தது.[8]

அய்யர் அவர்கள் மூலம் மட்டும் பதிப்பிக்கத் தொடங்கியது 1931இல் பத்துப்பாட்டு மூன்றாம் பதிப்பு முன்னுரையில் (1931) பின்வருமாறு அய்யர் எழுதியுள்ளார்.

> **'பல தமிழ் அன்பர்கள் விரும்பியபடி இப்பத்துப்பாட்டில்**
> **மூலத்தை மட்டும் இன்றியமையாத ஆராய்ச்சிக் குறிப்பு,**
> **அரும்பத அகராதியுடன் தனிபுத்தகமாக வெளியிட்டிருக்கிறேன்.**
> **முன்பு நான் பதிப்பித்துள்ள மற்றப் பழைய நூல்களையும்**
> **இங்ஙனமே வெளியிடக் கருதியிருக்கிறேன்'**

8. டாக்டர் உ.வே.சா., சங்கஇலக்கியப் பதிப்புகள், ப.14.

என்பது அவர் எழுதியுள்ள பகுதியாகும்.[9]

ஆனால் அய்யர் அவர்கள் பத்துப்பாட்டு, புறநானூறு, பெருங்கதை ஆகிய மூன்றிற்கு மட்டுமே மூலம் உள்ள பதிப்பை வெளியிட்டுள்ளார்கள். சில சிற்றிலக்கியங்களையும் இன்றியமையாக் குறிப்புரையுடன் மூலம் மட்டும் உள்ள பதிப்புக்களாக அய்யர் அவர்கள் வெளியிட்டுள்ளார்கள்.

## திரட்டு நூல்கள்

ஒரு புலவருடைய நூல்கள் முழுவதும் ஒரே இடத்தில் பதிப்பிக்கப் பெற்றால் அவரைப் பற்றியும், அவர் இலக்கியங்களைப் பற்றியும் ஆய்வு செய்வார்க்கு மிகவும் பயன் உடையதாக இருக்கும் என்பதைக் கண்ட அய்யர் அவர்கள் அம்முயற்சியில் ஈடுபட்டார்கள்.

தம் ஆசிரியப் பெருந்தகையார் ஆகிய மகாவித்துவான் 'மீனாட்சி சுந்தரம்பிள்ளையவர்களுடைய பிரபந்தத் திரட்டு' நூலை 1910 ஆம் ஆண்டு வெளியிட்டார்கள். அய்யர் அவர்கள் தம் காலத்திலேயே 1926 ஆம் ஆண்டு அதன் மறுபதிப்பை வெளியிட்டார்கள்.

மராட்டிய மன்னர் காலத்தில் தஞ்சையில் வாழ்ந்த பல நூல்களை இயற்றிய கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தத் திரட்டை 1932 ஆம் ஆண்டு வெளியிட்டார்கள். அப்பிரபந்தத் திரட்டில் ஒன்றாகிய தஞ்சைப் பெருவுடையார் உலாவில் பல வரலாற்றுச் செய்திகளை அய்யர் கூறியுள்ளார்.

திருப்பனந்தாள் காசிமடம் அய்யர் அவர்களோடு நெருங்கிய தொடர்புடையது. அய்யர் அவர்களைக் காசிமடத்துத் தலைவர்கள் பாராட்டியுள்ளனர். அய்யர் அவர்களின் பல நூல்களுக்குக் காசி மடத்து அதிபர்கள் உதவி செய்துள்ளனர். என் சரித்திரம் நூலாக வெளிவரக் காசிமடத்து அதிபர் அருள்நந்தித் தம்பிரான் அவர்கள் ஆர்வம் கொண்டு பின்னாளில் உதவினார்.

காசி மடத்தில் முதல்வர் குமரகுருபர சுவாமிகள் இயற்றிய சிற்றிலக்கியங்கள் எல்லாவற்றையும் தொகுத்து 1939 ஆம் ஆண்டு 'குமரகுருபரர் பிரபந்தத் திரட்டு' என்னும் நூலை அய்யர் அவர்கள்

---

9. பத்துப்பாட்டு, முன்னுரை, ப.30.

வெளியிட்டார்கள். உ.வே.சா. நூலகத்தினர் அப்பிரபந்தத் திரட்டின் இரண்டு பதிப்புகளை மறுபதிப்பாக வெளியிட்டுள்ளார்கள்.[10]

## சி.வை. தாமோதரம் பிள்ளையும் அய்யரும்

1832 ஆம் ஆண்டு இலங்கையில் தோன்றிச் சென்னையில் பட்டப்படிப்புப் படித்துப் பெரும்பாலும் தமிழ் நாட்டிலேயே வாழ்ந்து 1900 ஆம் ஆண்டு சென்னையில் மறைந்தவர் சி.வை. தாமோதரம் பிள்ளை அவர்கள்.

1854 முதல் 1898 வரை நீதிநெறி விளக்கம் (1854) தொல்காப்பியம் சொல்லதிகாரம் சேனாவரையம் (1868) வீரசோழியம் (1881) தணிகைப் புராணம் (1883) இறையனார் அகப்பொருள் உரை (1883), தொல்காப்பியம், பொருளதிகாரம் (1885) கலித்தொகை (1887), இலக்கண விளக்கம் (1886), சூளாமணி (1886) தொல்காப்பியம், எழுத்ததிகாரம் - நச்சினார்க்கினியம் (1890) சூளாமணி வசனம் (1898).

கும்பகோணம் கருப்பூரில் சி.வை. தாமோதரம்பிள்ளை அவர்கள் வாழ்ந்தபோது அய்யருக்கு அவருடன் நேரடித் தொடர்பு ஏற்பட்டுள்ளது. முன்பு கடிதப் போக்குவரத்து மட்டும் உண்டு. சி.வை.தா. விரும்பிய திருவாவடுதுறை மடத்திற்கு அழைத்துச் சென்று சி.வை.தா. அவர்கட்குத் திருமடத்தின் தொடர்பு ஏற்பட அய்யர் காரணமாக இருந்தார்.

தாம் சீவகசிந்தாமணிப் பதிப்பை வெளியிட வேண்டும் என்ற ஆர்வம் கொண்டிருந்தாலும் அய்யர் அவர்களின் முயற்சியைக் கண்டு தம் முயற்சியைக் கைவிட்டுச் சிந்தாமணிப் பதிப்பு விரைவில் வரவேண்டும் என்று சி.வை. தா. அய்யரைத் தூண்டியுள்ளார். இதை அய்யர் அவர்கள் தன் முன்னுரையில் கூறியுள்ளார்.

> **'சீவக சிந்தாமணி நூலையும் உரையையும் பின்னும் இரண்டொருமுறை பரிசோதிப்பதற்கு**
> **விருப்புடையனேனும்**
> **இவற்றை விரைவில் பதித்துப் பிரகடனம் செய்யும்படி ம.நா.நா.ஸ்ரீ.சி.வை தாமோதரம் பிள்ளையவர்கள் பலமுறை தூண்டியமையால் விரைந்து அச்சிடுவிக்கத் துணிந்தேன்?'**

10. என் சரித்திரம், பின்னிணைப்பு, பக்770-771.

என்பது சீவக சிந்தாமணி முதல் பதிப்பு முன்னுரையில் எழுதியுள்ளார்கள்.

அய்யர் அவர்கள் சிலப்பதிகாரம் பதிப்பிக்கும் போது (1892) அடியார்க்கு நல்லார் உரையுடன் கூடிய பிரதியை சி.வை.தா. அவர்கள் அய்யருக்குக் கொடுத்துள்ளார்கள்.

புறநானூறு பதிப்பிக்கும் போது (1894) முழுவதும் மூலம் மட்டும் அடங்கிய திருத்தணிகை சரவணப் பெருமாளய்யர் சுவடியையும், திருநெல்வேலி வண்ணார்பேட்டை திருப்பாற்கடனாத கவிராயரின் உரை அடங்கிய சுவடியையும் அய்யர் அவர்கட்கு வழங்கியுள்ளார்கள். இதை அய்யர் அவர்கள் தம் முன்னுரையில் நன்றியுடன் குறிப்பிட்டுள்ளார்கள்.

1887 ஆம் ஆண்டு அய்யர் அவர்கள் சீவக சிந்தாமணி பதிப்பித்த அதே ஆண்டில் சி.வை.தா. அவர்கள் கலித்தொகையை வெளியிட்டார்கள். அதன் முன்னுரையில்,

> 'இலக்கணக் கொத்துடையார் நூலாசிரியர், உரையாசிரியர், போதகாசிரியர் என வகுத்த மூவகை ஆசிரியரோடு பரிசோதனாசிரியர் என இன்னுமொன்று கூட்டி இவன் தொழில் முன் மூவர் தொழிலும் பார்க்க மிகக் கூடியதென்றும் அவர் அறிவு முழுவதுமே இவர்க்கு வேண்டியதென்றும் வற்புறுத்திச் சொல்லுகின்றேன். தூக்கினால் அன்றோ தெரியும் தலைச்சுமை, பரிசோதனாசிரியர் படுங் கஷ்டமும் ஓர் அரிய பழைய நூலைச் சுத்த மனச்சாட்சியோடு பரிசோதித்து அச்சிட்டார்க்கன்றி விளங்காது. இவையெல்லாம் அனுபவித்தாலன்றி அறியப்படாத பொருள்கள். ஒன்றற் கொவ்வாத இருபது இருபத்தைந்து பிரதிகளைச் சுருக்கி வைத்துக் கொண்டு என்கண் காணச் சிந்தாமணி பரிசோதனை செய்து பதிப்பித்த கும்பகோணம் வித்தியாசாலைத் தமிழ்ப் பண்டிதர் ஸ்ரீமத் வே.சாமிநாதய்யரைக் கேட்டால் இந்நால்வகை யாசிரியர் பாட்டின் தாரதம்மியம் சற்றே தெரியலாம். எனக்கு அவரும் அவருக்கு நானுமே சாட்சி

என சி.வை.தா. குறிப்பிட்டுள்ளார்கள்.[11]

---

11. சி.வை. தாமோதரம் பிள்ளை, கலித்தொகை, முன்னுரை, ப.61.

ஒரு முறை சீவகசிந்தாமணி அச்சிடத் தாள் கடனாக வாங்க அய்யருக்கு சி.வை.தா. உதவியுள்ளார். சி.வை.தா. குறித்து என் சரித்திரத்தில் அய்யர் பின்வருமாறு எழுதியுள்ளார்.

> சென்னையிலிருந்து சி.வை. தாமோதம் பிள்ளை எனக்கு எழுதியபடியே கும்பகோணத்தை அடைந்து அங்கே வக்கீலாக இருந்து வந்தார். அவர் முன்னமே ஒரு பெரிய உத்தியோகத்திலிருந்து பென்ஷன் பெற்றவர். அவர் அடிக்கடி என் வீட்டுக்கு வந்து தமிழ் நூல்கள் விஷயமாகச் சல்லாபம் செய்து பழகலானார் கும்பகோணத்துக்கு அருகேயுள்ள கருப்பூரில் ஜாகை வைத்துக் கொண்டிருந்தார். அவர் வீட்டுக்கு நானும் அடிக்கடி போய் வருவதுண்டு. தாம் பல தமிழ் நூல்களைப் பதிப்பிக்க எண்ணியிருப்பதாகத் தெரிவித்ததோடு திருவாவடுதுறை சென்று ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரைத் தரிசிக்க வேண்டுமென்று விரும்பினார். அங்ஙனமே நான் அவரை அழைத்துச் சென்று தேசிகருக்குப் பழக்கம் செய்வித்தேன். மடத்தில் பல ஏட்டுச் சுவடிகள் இருக்குமென்றும் அவற்றைத் தம்முடைய பதிப்புக்கு உபயோகித்துக் கொள்ளலாம் என்றும் அவர் கருதினார். தேசிகருடன் செய்த சம்பாஷணையிலிருந்து அவருடைய கல்வி யறிவையும், பெருந்தன்மையையும் உணர்ந்து கொண்டார்.
>
> கும்பகோணத்திலுள்ள கனவான்களையும், வக்கீல் களையும் தாமோதரம் பிள்ளைக்கு அவர் விரும்பியபடி பழக்கம் செய்வித்தேன். நாங்கள் இருவரும் தமிழ் சம்பந்தமான விஷயங்களைப் பேசுவோம். அவர் பல விஷயங்களைக் கேட்பார். நான் சொல்லுவேன். யாழ்ப்பாணத்திலுள்ள பல வித்தவான்களுடைய செய்திகள் அவர் மூலமாகத் தெரியவந்தன. அவருடன் ஆராய்ச்சிக்கு உதவியாக யாழ்ப்பாணத்து நல்லூர் சிற். கைலாசபிள்ளை என்ற ஒருவர் இருந்தார். அவர் நல்ல அறிவாளியாகத் தோன்றினார். என்பால் மிக்க அன்புடன் அவர் பழகினார்.
>
> ஒரு நாள் சம்பாஷணையில் ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் கம்பராமாயணத்தில் மிக்க விருப்ப முடையவர்களென்றும் அவர்களிடமிருந்து பல திருத்தமான பாடல்கள் தெரிய வந்தனவென்றும் தாமோதரம் பிள்ளையிடம் சொன்னேன். அன்றியும்

> மடத்திலுள்ள பிரதிகளை வைத்துக் கொண்டு இராமாயணம் முழுவதும் சோதித்து நல்ல பாடங்களைக் கைப்பிரதியில் குறித்துக் கொண்ட செய்தியையும் தெரிவித்தேன். பின்பு அவர் என்னிடமுள்ள கம்பராமாயணப் பிரதியை ஒவ்வொரு காண்டமாக வாங்கி நான் செய்திருந்த திருத்தங்களையெல்லாம் தம் பிரதியில் செய்து கொண்டு என் பிரதியை என்னிடம் திருப்பிக் கொடுத்துவிட்டார்.

என்பது அய்யர் அவர்கள் என் சரித்திரத்தில் எழுதியுள்ள பகுதிகளாகும்.[12]

ஒருமுறை சி.வை.தா. அவர்கள் அய்யருக்கு எழுதிய கடிதத்தில் 'பங்குனி மதியிலுற்பத்தியான தங்கள் சினேகம் பற்குனன் போலச் சீர் பெறுவதாக' என்று எழுதியிருந்தார். கடிதத்தில் தங்கள் ஊழியன் சி.வை. தாமோதரம் பிள்ளை என்றே கையொப்பமிட்டுள்ளார்.

சி.வை.தா. அவர்கள் இறையனார் அகப்பொருள் உரை பதிப்பிக்கும் போது அவரிடமில்லாத 59ஆம் நூற்பா உரை உள்ள பகுதியை அய்யர் அவர்கள் சி.வை.தா. அவர்கட்கு அனுப்ப ஏற்பாடு செய்தார்.

சி.வை.தா. அவர்கள் தணிகைப் புராணம் பதிப்பிக்கும் போது மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்களிடம் பாடம் கேட்ட மதுரை இராமசாமி பிள்ளை குறிப்பெடுத்து வைத்த பிரதியை அய்யர் அவர்கள் சி.வை.தா. அவர்கட்கு அனுப்ப ஏற்பாடு செய்தார்.

இருவருக்கும் மிக நல்ல உறவு இருந்துள்ளது. அய்யர் அவர்கள் சி.வை.தா. அவர்கட்கு உதவியது போலச் சி.வை.தா. அவர்களும் அய்யர் அவர்கட்குச் சில வகையில் உதவி செய்துள்ளார்.

இந்த நிகழ்ச்சிகளை உளம் கொள்ளாமல் சி.வை.தா. புகழ் தமிழ்நாட்டில் பரவுவதை அய்யர் தடுத்தார் என்று சிலர் எழுதியுள்ளது தவறானதாகும். இன்னும் ஒருபடி மேலே சென்று,

12. என்சரித்திரம், பக்.570-571.

**சாமிநாதய்யர் பதிப்புத் துறையிலே பெரும் புகழ் பெறுவதற்கும் சி.வை.தா.வே. காரணராக இருந்தார்.**

*பிற்காலத்தில் பதிப்புத் துறையில் புகழ் பெறவும் தமிழ்த்தாத்தா என்று புகழப் படுவதற்கும் சி.வை.தா.வே. காரணராயிருந்தார் எனலாம்'*

எனவும் எழுதியுள்ளார்.[13]

*சி.வை.தா. அவர்கள் மறைவிற்குப் பின்னர் 43 ஆண்டுகள் வாழ்ந்து ஏறக்குறைய 75க்கும் மேற்பட்ட நூல்களை அய்யர் அவர்கள் பதிப்பித்துள்ளார்கள். மேற்கண்ட இலங்கைப் பேராசிரியர்கள் கூறியுள்ளது மிகையான கூற்று என்பதில் சிறிதும் ஐயமில்லை.*

13. மனோன்மணி சண்முகதாஸ், சி.வை. தாமோதரம் பிள்ளை, ஓர் ஆய்வு நோக்கு, ப.67.

# துணை நூல்கள்


1. சாமிநாதையர். உ.வே. — என்சரித்திரம், எஸ். கலியாண சுந்தரையர், பதிப்பு, தியாகராச விலாசம், சென்னை, 1950.
2. சாமிநாதையர். உ.வே.(பதி) — நன்னூல் மூலமும் சங்கர நமசிவாயர் உரையும், தியாகராஜ விலாசம், சென்னை, 1953.
3. ” ” — நன்னூல் மூலமும் மயிலைநாதர் உரையும், உ.வே.சா. நூல் நிலையம், சென்னை, 1995.
4. ” ” — புறநானூறு மூலமும் உரையும், தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1985.
5. ” ” — பத்துப்பாட்டு மூலமும் உரையும், சென்னை, 1961.
6. ” ” — சிலப்பதிகார மூலம் அரும்பத உரையும், அடியார்க்கு நல்லார் உரையும், சென்னை, 1968.
7. ” ” — சீவகசிந்தாமணி மூலமும், நச்சினார்க்கினியர் உரையும், சென்னை, 1969.
8. ” ” — பெருங்கதை மூலமும் குறிப்புரையும், சென்னை, 1968.
9. சாமிநாதையர். உ.வே. — நினைவு மஞ்சரி, கலைமகள் காரியாலயம், சென்னை, 1953.
10. ” ” — நல்லுரைக் கோவை-4, தியாகராச விலாசம், சென்னை, 1953.
11. காசிராசன். எஸ்டி — உ.வே.சா.-ஒரு தமிழ் வாழ்வு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1987.

12. குளோரியாசுந்தரமதி — டாக்டர் உவேசா. சங்க இலக்கியப் பதிப்புகள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1984.

13. காசிராசன். இரா. — டாக்டர் உ.வே.சா. காப்பியப் பதிப்புகள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1985.

14. நாச்சிமுத்து. க. — டாக்டர் உ.வே.சா. இலக்கணப் பதிப்புகள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1986.

15. சொல்விளங்கும் பெருமாள் — டாக்டர் உ.வே.சா. பதிப்புப் பணி ஓர் ஆய்வு, திருமகள் நிலையம், சென்னை, 1984.

16. வையாபுரிப்பிள்ளை. எஸ். — தமிழ்ச் சுடர் மணிகள், பாரி நிலையம், சென்னை, 1952.

17. மனோன்மணி சண்முகதாஸ் — சி.வை. தாமோதரம் பிள்ளை- ஓர் ஆய்வு நோக்கு, யாழ்ப்பாணம்.

## கவிதாஞ்சலி

ஏடு தேடி அலைந்தவூர் எத்தனை?
    எழுதி யாய்ந்த குறிப்புரை எத்தனை?
பாடுபட்ட பதத்தெளி வெத்தனை?
    பன்னெ றிக்கட் பொருட்டுணி வெத்தனை?
நாடு மச்சிற் பதிப்பிக்குங் கூலிக்கு
    நாளும் விற்றபல் பண்டங்க ளெத்தனை?
கூட் நோக்கினர்க் காற்றின தெத்தனை?
    கோதி லாச்சாமி நாதன் தமிழ்க்கென்றே!

பொன்ப லாயிர மும்பொரு வாதுநீ
    புரிந்த வண்டமிழ்த் தொண்டினுக் கொண்டுசில்
நின்ப லாயிர மான குறிப்புரை
    நீடு செய்புகழ்ப் போர்வைக்கு நேருமோ?
உன்ப ராவுமெய்ந் நூல்வடி வாகுநீ
    ஊழி ஊழியும் வாழ்கென ஓதுமிவ்
அன்ப லாலெது வுந்தர வாய்ந்திலேன்
    ஐயனே சாமி நாதநின் மெய்யனே!

– இரா. இராகவன்

செம்பரிதி ஒளிபெற்றான்; பைந்நறவு
    சுவைபெற்றுத் திகழ்ந்தது; ஆங்கண்
உம்பரெலாம் இறவாமை பெற்றனரென்று
    எவரேகொல் உவத்தல் செய்வார்?
கும்பமுனி யெனத்தோன்றும் சாமிநா
    தப்புலவன் குறைவில் கீர்த்தி
பம்பலுறப் பெற்றனனேல், இதற்கென்கொல்
    பேருவகை படைக்கின் றீரே ?

அன்னியர்கள் தமிழ்ச் செல்வி அறியாதார்
    இன்றெம்மை ஆள்வோ ரேனும்

பன்னியசிர் மஹாமஹோ பாத்தியா
யப்பதவி பரிவின் ஈந்து
பொன்னிலவு குடந்தைநகர்ச் சாமிநா
தன்றனக்குப் புகழ்செய் வாரேல்
முன்னிவனப் பண்டியர்நாள் இருந்திருப்பின்
இவன்பெருமை மொழிய லாமோ?

நிதியறியோம் இவ்வுலகத் தொருகோடி
இன்பவகை நித்தந் துய்க்கும்
கதியறியோம் என்றுமனம் வருந்தற்க
குடந்தைநகர்க் கலைஞர் கோவே
பொதியமலைப் பிறந்தமொழி வாழ்வறியும்
காலமெல்லாம் புலவோர் வாயிற்
றுதியறிவாய் அவர்நெஞ்சின் வாழ்த்தறிவாய்
இறப்பின்றித் துலக்கு வாயே!

– சுப்பிரமணிய பாரதியார்

பார்காத்தார் ஆயிரம்பேர், பசித்தார்க் காகப்
பயிர்காத்தார் ஆயிரம்பேர், பாலர்க் காக
மார்காத்தார் ஆயிரம்பேர், வாழ்ந்த நாட்டில்
மனங்காத்த தமிழ்த்தாய் என்உடமை எல்லாம்
யார்காத்தார் எனக்கேட்க, ஒருவன் "அம்மா
யான்காப்பேன்" எனவெழுந்தான் சாமி நாதன்
நீர்காத்த தமிழகத்தார் நெஞ்சின் உள்ளான்
நிலைகாத்த மலையிமய நெற்றி மேலான்

பொய்யாத தமிழ்க்குமரி ஈன்றசாமி;
போகாத புகழ்க்கன்னி மணந்த நாத;
செய்யாத மொழித்தொண்டு செய்த ஐய;
சிறுகாத நெஞ்சத்தேம் வணங்கு செம்மல்
எய்யாத திருவடியால் எண்பத் தாண்டும்
இளையாத உள்ளத்தால் எங்குஞ் சென்று
நெய்யாத தொன்னூல்கள் நிலைக்க வைத்த
நீங்காத தமிழ்க்குயிரே நின்தாள் வாழ்க!

– பேராசிரியர் வ.சுப. மாணிக்கம்.

## மகாமகோபாத்தியாய
## டாக்டர் உ.வே.சாமிநாதையரவர்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகள்

| | | |
|---|---|---|
| *19.02.1855* | - | திங்கட்கிழமை தஞ்சை மாவட்டத் திலுள்ள சூரிய மூலை என்னும் ஊரில் பிறந்தார். |
| *1861* | - | அரியலூர் சடகோப ஐயங்காரிடம் பாடங் கேட்கத் தொடங்கியது. |
| *1862* | - | உபநயனம் - பெயர் : வேங்கடராமன் |
| *16.06.1868* | - | திருமணம் - மனைவி மதுராம்பாள் |
| *1869* | - | செங்கணம் விருத்தாசல ரெட்டியாரிடம் யாப்பருங் கலக்காரிகை பாடம் கேட்டது. |
| *1871* | - | மாயூரத்தில் திரிசிரபுரம் மகாவித்துவான் ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களிடம் மாணவனாகச் சேர்ந்தது. ஸ்ரீ கோபாலகிருஷ்ண பாரதியாரைச் சந்தித்தது, ஆசிரியர் இட்ட பெயர் சாமிநாதன், திருவாவடுதுறை ஆதீனகர்த்தர் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர், வித்துவான் தியாகராச செட்டியார் இவர்களுடைய தொடர்பும் ஆதரவும். |
| *1872* | - | ஆசிரியருடன் திருவாவடுதுறை சென்றது. |
| *1873.* | - | உத்தமதானபுரத்தில் கவி இயற்றியது. ஆவுடையார் கோயிலில் புராணப் பிரசங்கம். |
| *1874* | - | செங்கணத்தில் முதன் முதல் நூல் இயற்ற ஆரம்பித்தல்- நூலின் பெயர் "நீலி இரட்டை மணிமாலை", திருவிளையாடற் புராணப் பிரசங்கம். |
| *31.01.1876* | - | ஆசிரியர் மறைவு. வேதநாயகம் பிள்ளை சந்திப்பு. திருவாவடுதுறை மடத்தில் ஆசிரியராகவும், மாணாக்கராகவும் பணியாற்றல். |
| *1877* | - | ஆதீனகர்த்தர் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரை அய்யரவர்களின் தந்தையார் கண்டு உரையாடியது. அய்யரவர்கள் வசிப்பதற்குத் தேசிகர் இல்லம் அமைத்துக் கொடுத்தது. மாத வேதனம் அளித்தமை. |

| | | |
|---|---|---|
| 1878 | - | மதுரை, திருநெல்வேலிப் பயணம் ஆதீனகர்த்தர் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் அய்யரவர்களுக்குச் சன்மானம் அளித்தது. |
| 1880 | - | வித்துவான் தியாகராச செட்டியார் அவர்களின் விடா முயற்சியால், கும்பகோணம் கல்லூரியில் தமிழாசிரியராக வேலை பெற்றது. சேலம் இராமசாமி முதலியார் சந்திப்பு. சீவகசிந்தாமணி பதிப்பு ஆரம்பம். சமண நண்பர்கள் தொடர்பு. |
| 1883 | - | திருக்குடந்தைப் புராணப் பதிப்பு. |
| 1884 | - | பரம்பரைச் சொத்தாகிய நிலத்தை ஒற்றியிலிருந்து மீட்டது. முதற் தடவை சென்னை வருகை. |
| 1885 | - | கும்பகோணம் மகாமகம். திருவாவடுதுறை மகாசந்நிதானம் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் அய்யரவர்கள் தந்தையாருக்கும் அய்யரவர் களுக்கும் பீதாம்பரம் அளித்ததுடன், அய்யரவர்கள் குமாரர் கலியாண-சுந்தரையருக்கும் சந்திரஹாரம் என்னும் பொன்னாபரணம் அளித்தது. |
| 1887 | - | சீவகசிந்தாமணி பதிப்பித்து முடிந்து, தமிழுலகில் உலாவ ஆரம்பித்தது. |
| 1888 | - | திருவாவடுதுறை மகாசந்நிதானம் பரிபூரணம் எய்தியது. தியாகராச செட்டியார் மறைவு; நெல்லை மாவட்டத்தில் ஏடுதேடத் தொடங்கியது. |
| 1889 | - | பத்துப்பாட்டு அச்சிட்டு நிறைவேறியது. சிலப்பதிகாரப் பதிப்பு ஆரம்பம். சென்னைக்கு வந்து பூண்டி அரங்கநாத முதலியார் இயற்றிய "கச்சிக்கலம்பகம்" அரங்கேற்றத்தில் கலந்து கொண்டது. |
| 1891 | - | சீவகசிந்தாமணி புத்தகத்தைக் கண்டு பாரிஸ் பேராசிரியர் ஜுலியோன் வின்ஸோன் அவர்கள் பாராட்டி எழுதியது. குமாரனுக்கு உபநயனம். |
| 1892 | - | சேலம் இராமசாமி முதலியார் மறைவு. சிலப்பதிகாரம் பதிப்பித்து முடிந்தது. பாஸ்கர சேதுபதி அவர்களின் அழைப்பின் பேரில் இராமநாதபுரம் சென்று நவராத்திரி விழாவில் கலந்து கொண்டது. |
| 7.10.1893 | - | தந்தையார் மறைவு. |
| 10.12.1893 | - | பூண்டி அரங்கநாத முதலியார் மறைவு. |
| 27.01.1893 | - | மகாவைத்தியநாதையர் மறைவு. |
| 1894 | - | புறநானூறு பதிப்பு. பாண்டித்துரைத் தேவர் சந்திப்பு. கும்பகோணத்தில் வீடு வாங்கியது. புறப்பொருள் வெண்பாமாலை பதிப்பு. |

| | | |
|---|---|---|
| 1895 | - | ஜி.யூ. போப் அவர்களுடன் கடிதத் தொடர்பு. |
| 1898 | - | மணிமேகலை பதிப்பு நிறைவேறியது. |
| 1903 | - | சென்னை மாநிலக் கல்லூரிக்குக் குடந்தையிலிருந்து மாற்றப் பெற்றது. |
| 01.01.1906 | - | 'மகாமகோபாத்தியாய' பட்டம் பெற்றது.கல்வி இலாகா ரூ1000 வழங்கியது. |
| | | சென்னை கவர்னர் லார்டு கார்மிகேல் பிரபுவோடு உரையாடிப் பாரட்டப் பெற்றது. |
| | | திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணப் பதிப்பு நிறைவேறியது. |
| 1909 | - | சென்னையில் வீடு வாங்கி "தியாகராச விலாசம்" என்று பெயரிடப்பட்டது. |
| 12.12.1911 | - | ஜார்ஜ் மன்னர் முடிசூட்டு விழாவினையொட்டி ரூ.100/- 'காரனேஷன் பென்ஷன்' ஆண்டுக் கொருமுறை வழங்கப் பெற்றது |
| 24.01.1912 | - | கவர்னர் துரை தமிழ் வகுப்பிற்கு வந்து 1-1/2 மணி நேரம் இருந்தது. தமிழ்ச் சுவடிகளைக் காட்டி வாழ்த்துப்பா அளித்தது. |
| 1916 | - | மைசூர்ப் பல்கலைக்கழகத் திராவிடியன் போர்டில் நியமனம். |
| 31.01.1917 | - | காசி பாரத தர்ம மகாமண்டலத்தாரால் 'திராவிட வித்யா பூஷணம்' பட்டம் பெற்றது. |
| 01.03.1917 | - | காசி பல்கலைக்கழக உறுப்பினர், தேர்வாளராக நியமனம். |
| 08.05.1917 | - | மனைவியார் மறைவு. |
| 01.04.1991 | - | வேலையிலிருந்து ஓய்வு பெற்றது. (39 வருட உழைப்புக்குப் பின்). டாக்டர் ரவீந்திரநாத் தாகூர் வீட்டிற்கு வந்து அளவளாவியது. |
| 13.01.1922 | - | மேன்மை தங்கிய வேல்ஸ் இளவரசர் சென்னைக்கு வந்தபோது 'கில்லத்துப் பெற்றது |
| 12.02.1924 | - | பெருங்கதை பதிப்புப் பூர்த்தி. |
| 1924-1927 | - | சிதம்பரம் மீனாட்சி தமிழ்க் கல்லூரிப் பிரின்ஸ் பாலாகப் பதவி ஏற்றுப் பல நன்மாணாக்கர் களுக்குப் பாடம் சொல்லியது. |
| 1925 | - | காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள் அவர்களால் 'தாக்ஷிணாத்ய கலாநிதி' என்ற பட்டம் சூட்டப்பெற்றது. |

1927 - சென்னைப் பல்கலைக்கழக ஆதரவில் 'சங்க காலத் தமிழும் பிற்காலத் தமிழும்' என்ற தலைப்பில் 10 தினங்கள் சொற்பொழிவு ஆற்றியது. (பின் நூலாக வெளிவந்தது).

21.03.1932 - சென்னைப் பல்கலைக் கழகத்தாரால் 'டாக்டர்' பட்டம் அளிக்கப் பெற்றது.

1932 - தமிழன்பர் மகாநாட்டு வரவேற்புத் தலைவராக இருந்தது.

04.03.1933 - ஆந்திரப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பாடத்திட்டக் குழு உறுப்பினராக ஒப்புக் கொண்டது.

மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரத்தை எழுதி வெளியிட்டது.

1935 - எண்பதாவது ஆண்டு நிறைவு விழா நாடு முழுவதும் கொண்டாடப் பெற்றமை.

1937 - குறுந்தொகைப் பதிப்பு.

16.01.1937 - குடந்தை, கோபாலராவ் நூல் நிலையத்தில் ஐயரவர்கள் படத் திறப்பு.

06.02.1937 - சநாதன தர்ம மகாநாட்டில் கலந்து கொண்டது.

27.03.1937 - பாரதீய சாஹித்ய பரிஷத்-மகாத்மா காந்தி தலைமை வரவேற்புரை நிகழ்த்தியது. மகாத்மா காந்தியுடன் உரையாடல்.

11.01.1938 - சென்னையில் வைஸ்ராய் நடத்திய விருந்தில் கலந்து கொண்டது.

15.03.1938 - ஆக்ஸ்போர்டு சமஸ்கிருத ஆசிரியர் பிரசங்கத்திற்குச் சென்றது. மணிமேகலையைப் பற்றிப் பாராட்டிப் பேசினார்கள்.

01.08.1939 - கொப்பனாப்பட்டிக் கல்லூரித் திறப்பு விழாவில் முன்னுரை.

25.11.1939 - செவ்வைச் சூடுவார் பாகவதம் குறிப்புரை எழுத ஆரம்பித்தது.

28.11.1939 - டிகேசி. அவர்களும், கல்கி அவர்களும் வீட்டிற்கு வந்து உரையாடினார்கள்.

07.12.1939 - ஹிந்து பத்திரிகை வைரவிழா வாழ்த்து.

15.12.1939 - கல்கி அவர்களிடம் ஆனந்த விகடன் பத்திரிக்கையில் வெளியிட 'சுய சரிதம்' முதல் அத்தியாயம் எழுதிக் கொடுத்தது.

12.06.1940 - கூத்தனூர் கலைமகள் தொடர்பாகப் பாடல்கள் எழுதி அனுப்பினமை.

| | | |
|---|---|---|
| 05.08.1941 | - | தமிழிசையைப் பற்றி டைகர் வரதாசாரியாருக்குத் தன் கருத்தை எழுதியனுப்பியது. |
| 29.09.1941 | - | திருச்சி வானொலியில் 'எதுதமிழ்' என்பது பற்றி ஒரு பேச்சு. |
| 07.12.1941 | - | கனகாபிஷேகம்-கொள்ளுப் பேரனால். |
| 13.01.1942 | - | இரவு மெத்தைப் படியில் தவறி விழுந்தது. |
| 29.01.1942 | - | டாக்டர் திருமூர்த்தி அவர்கள் வந்து பார்த்து, அவரது ஆலோசனையின் படி சிவராம கிருஷ்ணையரைக் கொண்டு நிழற்படம் எடுக்கப்பட்டது. |
| 12.02.1942 | - | திருக்கழுக்குன்றம் சென்றது (இரண்டாம் உலக மகாயுத்தம் காரணம்). |
| 27.04.1942 | - | மாலை குளிர் காய்ச்சல் கண்டது. |
| 28.04.1942 | - | மாலை 3.35-க்கு இறைவனடி சேர்ந்தது. |
| 05.07.1943 | - | "டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம்" தொடக்க விழா, திருமதி. ருக்மிண் அருண்டேல் அவர்கள் ஆதரவில். |
| 1948 | - | உருவச்சிலை, மாநிலக் கல்லூரியில் திறக்கப்பெற்றது. |
| 1955 | - | நூற்றாண்டு விழா. |

## மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே. சாமிநாதையரவர்கள் பதிப்பித்த நூல்களின் அகரவரிசை

| | | |
|---|---|---|
| 1. | அழகர் கிள்ளை விடு தூது | 1938 |
| 2. | ஆற்றூர்ப் புராணம் | 1935 |
| 3. | இயற்பகை நாயனார் சரித்திரக் கீர்த்தனை | 1936 |
| 4. | உதயண குமார காவியம் | 1935 |
| 5. | உதயணன் சரித்திரச் சுருக்கம் | 1924 |
| 6. | ஐங்குறு நூறு | 1903 |
| 7. | கச்சி ஆனந்தருத்திரேசர் வண்டுவிடு தூது | 1888 |
| 8. | கடம்பர் கோயிலுலா | 1932 |
| 9. | கபாலீசுவரர் பஞ்சரத்தினம் | 1940 |
| 10. | கலைசைக் கோவை | 1935 |
| 11. | களக்காட்டுச் சத்தியவாகீசர் இரட்டை மணி மாலை | 1935 |
| 12. | கனம் கிருஷ்ணையர் | 1936 |
| 13. | குமர குருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு | 1939 |
| 14. | குறுந்தொகை | 1937 |
| 15. | கோபால கிருஷ்ண பாரதியார் | 1936 |
| 16. | சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும் | 1929 |
| 17. | சங்கர நயினார் கோயிலந்தாதி | 1934 |
| 18. | சங்கரலிங்க உலா | 1933 |
| 19. | சிராமலைக் கோவை | 1937 |
| 20. | சிலப்பதிகாரம் | 1892 |
| 21. | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தங்கள் | 1932 |
| 22. | சிவசிவ வெண்பா | 1938 |
| 23. | சீகாழிக் கோவை | 1903 |
| 24. | சீவக சிந்தாமணி | 1887 |
| 25. | சூரைமாநகர்ப் புராணம் | 1904 |
| 26. | செவ்வைச் சூடுவார் பாகவதம் | 1941 |
| 27. | தக்கயாகப் பரணி | 1930 |
| 28. | தண்டபாணி விருத்தம் | 1891 |
| 29. | தணிகாசலபுராணம் | 1939 |

| | | |
|---|---|---|
| 30. | தமிழ்நெறி விளக்கம் | 1937 |
| 31. | தமிழ்விடு தூது | 1930 |
| 32. | தனியூர்ப் புராணம் | 1907 |
| 33. | திருஇலஞ்சி முருகன் உலா | 1935 |
| 34. | திருக்கழுக்குன்றச் சிலேடை வெண்பா | 1933 |
| 35. | திருக்கழுக்குன்றத்துலா | 1938 |
| 36. | திருக்கழுக்குன்றக் கோவை (மறைவிற்குப் பின் வெளியீடு) | 1943 |
| 37. | திருக்காளத்தி நாதர் இட்ட காமிய மாலை | 1938 |
| 38. | திருக்காளத்தி நாதருலா | 1904 |
| 39. | திருக்காளத்திப் புராணம் | 1912 |
| 40. | திருக்குடந்தைப் புராணம் | 1883 |
| 41. | திருக்குற்றாலச் சிலேடை வெண்பா | 1940 |
| 42. | திருத்தணிகைத் திருவிருத்தம் | 1914 |
| 43. | திருநீலகண்ட நாயனார் சரித்திரம் | 1936 |
| 44. | திருப்பாதிரிப்புலியூர்க் கலம்பகம் | 1908 |
| 45. | திருப்பூவன நாதருலா | 1904 |
| 46. | திருப்பெருந்துறைப் புராணம் | 1892 |
| 47. | திருமயிலைத் திரிபந்தாதி | 1888 |
| 48. | திருமயிலை யமக அந்தாதி | 1936 |
| 49. | திருமலையாண்டவர் குறவஞ்சி | 1938 |
| 50. | திருவள்ளுவரும் திருக்குறளும் | 1936 |
| 51. | திருவாரூர்க் கோவை | 1937 |
| 52. | திருவாரூர்த் தியாகராச லீலை | 1905 |
| 53. | திருவாரூருலா | 1905 |
| 54. | திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் | 1906 |
| 55. | திருவாவடுதுறைக் கோவை | 1903 |
| 56. | தேவையுலா | 1907 |
| 57. | நல்லுரைக் கோவை பகுதி-1 | 1937 |
| 58. | நல்லுரைக் கோவை பகுதி-2 | 1937 |
| 59. | நல்லுரைக் கோவை பகுதி-3 | 1938 |
| 60. | நல்லுரைக் கோவை பகுதி-4 | 1939 |
| 61. | நன்னூல் சங்கர நமச்சிவாயருரை (சிவஞான முனிவர் விளக்கம் இல்லாமல்) | 1925 |
| 62. | நன்னூல் மயிலைநாதருரை | 1918 |
| 63. | நான் கண்டதும் கேட்டதும் | 1936 |
| 64. | நினைவு மஞ்சரி பகுதி-1 | 1940 |
| 65. | நினைவு மஞ்சரி பகுதி-. | 1942 |
| 66. | நீலி இரட்டை மணிமாலை | 1974 |
| 67. | பத்துப்பாட்டு மூலம் | 1931 |

| | | |
|---|---|---|
| 68. | பத்துப்பாட்டு மூலமும் உரையும் | 1889 |
| 69. | பத்மகிரி நாதர் தென்றல்விடு தூது | 1932 |
| 70. | பதிற்றுப் பத்து | 1904 |
| 71. | பரிபாடல் | 1918 |
| 72. | பழமலைக் கோவை | 1935 |
| 73. | பழனி இரட்டை மணிமாலை | 1935 |
| 74. | பழனிப் பிள்ளைத்தமிழ் | 1932 |
| 75. | பாசவதைப் பரணி | 1933 |
| 76. | புகையிலைவிடு தூது | 1939 |
| 77. | புத்த சரித்திரம் பௌத்த தருமம், பௌத்த சங்கம் | 1898 |
| 78. | புதியதும் பழையதும் | 1936 |
| 79. | புறநானூறு | 1894 |
| 80. | புறநானூறு மூலம் | 1936 |
| 81. | புறப்பொருள் வெண்பாமாலை | 1895 |
| 82. | பெருங்கதை | 1924 |
| 83. | பெருங்கதை மூலம் | 1936 |
| 84. | மகரநெடுங் குழைக்காதர் பாமாலை | 1939 |
| 85. | மகாவைத்திய நாதையர் | 1936 |
| 86. | மண்ணிப்படிக்கரைப் புராணம் | 1907 |
| 87. | மணிமேகலை | 1898 |
| 88. | மணிமேகலைக் கதைச் சுருக்கம் | 1898 |
| 89. | மத்தியார்ஜ்ஜுன மான்மியம் (திருவிடைமருதூர்) | 1885 |
| 90. | மதுரைச் சொக்கநாதர் மும்மணிக் கோவை | 1932 |
| 91. | மதுரைச் சொக்கநாதருலா | 1931 |
| 92. | மான்விடு தூது | 1936 |
| 93. | மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரம் பகுதி-1 | 1933 |
| 94. | மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரம் பகுதி-2 | 1934 |
| 95. | மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் பிரபந்தத் திரட்டு | 1910 |
| 96. | மூவருலா (மறைவிற்குப் பின் வெளியீடு) | 1946 |
| 97. | வலிவல மும்மணிக் கோவை | 1934 |
| 98. | வித்துவான் தியாகராச செட்டியார் | 1942 |
| 99. | வில்லைப் புராணம் | 1940 |
| 100. | விளத்தொட்டிப் புராணம் | 1934 |
| 101. | வீரவனப் புராணம் | 1903 |
| 102. | வேணுவனலிங்க விலாசச் சிறப்பு (முதல் பதிப்பு நூல்) | 1878 |

# சொல்லடைவு

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை – 600 113
அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| AN INTRODUCTION TO RELIGION AND PHILOSOPHY - TEVARAM AND TIVVIYAPPIRAPANTAM | 200.00 |
| பெ.நா. அப்புசுவாமியின் அறிவியல் கட்டுரைகள் தொகுதி-2 | 80.00 |
| தாய்நாட்டிலும் மேலை நாடுகளிலும் தமிழியல் ஆய்வு | 75.00 |
| ஜப்பானியக் காதல் பாடல்கள் | 75.00 |
| குறுந்தொகை - ஒரு நுண்ணாய்வு | 80.00 |
| தமிழ் நாட்டுப்புறவியல் ஆய்வின் வரலாறு | 50.00 |
| தமிழ் நாடகம் – நேற்றும் இன்றும் | 30.00 |
| நாடகமும் நாடகக் கம்பெனி அனுபவங்களும் | 60.00 |
| இராமாயணம் - தோற்பாவை நிழற்கூத்து | 125.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-4 | 110.00 |
| நாட்டுப்புறக் கதைகளும் நாடக ஆக்கமும் | 30.00 |
| A BUNCH OF ESSAYS ON TAMIL LITERATURE | 30.00 |
| திருக்குறள் பூரணலிங்கம்பிள்ளை ஆங்கில மொழிபெயர்ப்பு | 100.00 |
| தொல்காப்பியப் பாவியல் கோட்பாடுகள் | 40.00 |
| ON TRANSLATING TIRUKKURAL | 50.00 |
| ஐங்குறுநூறு மூலமும் உரையும் | 85.00 |
| தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள் | 40.00 |
| சொற்பிறப்பு - ஒப்பியல் தமிழ் அகராதி | 200.00 |
| THIRUVACHAGAM | 175.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் நாடகங்கள் | 75.00 |
| நானும் என் எழுத்தும் | 50.00 |
| தமிழர் கட்டிடக்கலை | 30.00 |
| THE NARRINAI FOUR HUNDRED | 175.00 |
| சர்வக்ஞர் உரைப்பா | 40.00 |
| தமிழில் ஆவணங்கள் | 75.00 |
| தமிழ் மேடை நாடக வரலாறு | 55.00 |
| பரதநாட்டிய சாஸ்திரம் | 150.00 |
| இந்திய விடுதலைக்குப் பின் தமிழிலக்கியச் செல்நெறிகள் | 55.00 |
| மேலை நோக்கில் தமிழ்க்கவிதை | 100.00 |
| SOUND CORRESPONDENCES BETWEEN TAMIL & JAPANESE | 35.00 |
| அயலகத் தமிழ்க்கலை, இலக்கியம், சமகாலச் செல்நெறிகள் | 125.00 |
| TAMIL LITERATURE AND INDIAN PHILOSOPHY | 200.00 |
| சதகத்திரட்டு தொகுதி-1 | 80.00 |
| தொல்காப்பிய இலக்கண மொழியியல் கோட்பாடுகள் | 70.00 |
| எழுத்திலக்கணக் கோட்பாடு | 70.00 |
| சதகத்திரட்டு தொகுதி-2 | 55.00 |
| தமிழ்ப் பண்பாடு | 25.00 |
| உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடி விளக்க அட்டவணை-4 | 70.00 |
| சுவடிச்சுடர் | 120.00 |
| தமிழிலக்கியத்தில் ஊனமுற்றோர் | 45.00 |
| தமிழக மகளிரியல் | 80.00 |
| அறிவியல்தொழில்நுட்பக்கல்வி இன்றையசந்தைச்சவால்கள் | 25.00 |
| பாரதி இந்தியா | 40.00 |

**Pub.No.447** உ. வே. சா. பதிப்புப் பணியும் பன்முக மாட்சியும் **35.00**